# தமிழ் மலர்ச்சி















ஐந்தாவது உலகத்தமிழ்
ஆராய்ச்சி மாநாட்டுச் சிறப்பு
மலர். 1981

மலர் வெளியீட்டுக் குழு:

ஆர். கீதா
கலைவாணி தியாகராஜன்
ஆ. பா. தசரதன்
அ. ஜெபரத்தினம்
வி. சி. அப்பாசாமி

---

மலர் கிடைக்குமிடம்:

இலண்டன்:

TAMIL MALARCHI
32-B, Beresford Road,
London. N. 8.

ஃபிரான்சு:

Mme. ELAN PAQUIAME
6, Rue d'hostellerie
95130-Franco Ville
FRANCE.
Tel: 4155810

இந்தியா:

கீதா அச்சகம்,
87, சின்னவாய்க்கால் தெரு,
புதுச்சேரி-605 001.

---

மலர் விலை:

| | | |
|---|---|---|
| U. K. | — | 50 Pence |
| France | — | 5 Fr. Fns |
| இந்தியா | — | 5 ரூபாய் |
| இதர நாடுகள் | — | £ 1 |

[தபால் செலவு உட்பட]

---

அச்சிட்டோர்:

திரு இராமன் அச்சகம்,
106-c, அண்ணா சாலை,
புதுச்சேரி-605 001.
தொலைபேசி: 489

# உள்ளுறை

# முன்னுரை

ஒருவனது வாழ்வினுக்கு விழியின் அவசியம் போன்றே, அவன் சமூகத்துடன் உறவாட—உரையாட மொழியின் அவசியம் உணரப்பட்டு, அதுவே அறிவு வளர்ச்சிக்கும், அதன்வழி நாகரிக வளர்ச்சிக்கும் இன்றியமையாத ஒன்றாகி விட்டது. காட்டு மிராண்டியாக விலங்கோடு விலங்காகத் திரிந்த மனிதனின் சிந்தனைக்கு 'மொழி வடிவம்' கொடுக்கக் கற்றுக்கொண்டபொழுது தான், அவன் விலங்கிடமிருந்து விலகியிருந்து, அவையெல்லாம் வலிமை பெற்றவையாக யிருந்தாலுங்கூட, இவனொருவனே வல்லமை பெற்றவனாக விளங்க முடிந்தது. எத்தனையோ மொழிகள் பிறந்தும் பின்னர் இறந்தும் போனாலுங்கூட தமிழ் மொழியொன்றே, கால மாற்றத்திற்கேற்ப வளர்ச்சியடைந்து இன்றளவும் சிறந்து விளங்குகிறது.

பல கடல்கோள்களும், இடையூறுகளையும் தாங்கிக் கொண்டு, தமிழ் குன்றாச் சிறப்புடன் நின்று நிலவுகிறதென்றால், அந்தப் பெருமைக்குரியவர்கள் தமிழ்ப் பெரியவர்களே ஆவர்.

உலகத் தமிழ் அறிஞர்களெல்லாம் ஒன்றுகூடி, தமிழை ஆய்ந்து கருத்தரங்கு நடத்துவது — அதுவும் ஐந்தாம் உலகத்தமிழ் ஆராய்ச்சி மாநாட்டை பழம் பெருமை உடைய மதுரையில் நடத்துவது கண்டு தமிழ் மலர்ச்சி மகிழ்ச்சியடைவதுடன், கருத்தரங்கில் கலந்துகொள்பவர்களுக்கும் — கலந்துகொள்ளாத தமிழ் அறிஞர்களின் ஆய்வுக்கட்டுரைகளைத் தாங்கி, 'சிறப்பு மலராக' வெளி வருகிறது. இலண்டன் மாநகரிலிருந்து உலகத் தமிழர்களுக்காகவே நடத்தப்படும் 'தமிழ் மலர்ச்சி' உலகத் தமிழர்கள் ஒன்றுகூடும் நாளில், அவர்தம் எண்ணங்களை தமிழ்த் தேன் கிண்ணத்தில் வழங்கிட வாழ்த்துவதோடு தனது மலர்த்தேன் சொட்டுகளையும் வடிக்கிறது!

இந்த மலரைச் சிறப்பாக வெளியிடுவதற்கு உதவியாக இருந்த அனைவருக்கும் எங்களது நன்றி உரித்தாகும்; குறிப்பாக விரைவில் அச்சிட்டுத்தந்த புதுவை, திரு இராமன் அச்சகத்தாருக்கு நன்றி செலுத்துகிறோம்.

இந்த மலருக்காக மட்டுமின்றி, 'தமிழ் மலர்ச்சி'யை இது காறும் தடையேதுமின்றி வெளியிடுவதற்கும் உறுதுணையாக இருப்பவர்கள் சென்னையில் திரு. கே. என். நாகராஜன்; இலண்டனில் திருமதி ஆர். கீதா இவர்களுக்கு நன்றி சொல்ல சொல்லே இல்லை!

**வி. சி. அப்பாசாமி**
நிர்வாக ஆசிரியர்.

## மலர் காணிக்கை



கற்றோரும் தமிழைக் கடைந்தோரும் அமுதக்
கருத்துப்பரி மாறும் கூடல்மா நாட்டில்
உற்றோனாய் உலகில் உலவிவரும் மலர்ச்சி
உவகைத்தேன் மலர்ப டைத்தளித்து எந்தன்
பெற்றோராம் கோகுல வீரப்பன் தனக்கும்
பச்சையம்மாள் தாய்க்கும் காணிக்கையாக்கி
குற்றால மலைவீழ் அருவிபோல் உள்ளம்
குளிர்கின்ற செல்வ மகன்அப்பாசாமி



தெள்ளு தமிழ் நடை
　　சின்னஞ்சிறிய இரண்டடிகள்
அள்ளு தொறுஞ்சுவை
　　உள்ளுந்தொறும் உணர்வாகும் வண்ணம்
கொள்ளும் அறம், பொருள்
　　இன்பம் அனைத்தும் கொடுத்த திரு
வள்ளுவனைப் பெற்ற
　　தால் பெற்றதே புகழ்வையகமே!

— புரட்சிக் கவிஞர் சூட்டிய பொன்னாரம்.






தமிழ்ச் சமுதாயத்தினை நெடிய தூக்கத்தினின்று எழுப்பி, சிந்தனை வாளினைத் தீட்டிக் கையில் கொடுத்து, உரிமைப் போருக்கு வழியனுப்பி வைத்தார் ''உயர் எண்ணங்கள் மலரும் சோலை'' யான தந்தை பெரியார். வாளேந்திய தமிழன், வழி யோடு செல்லவும் அறிவுப் போரினிலே வெல்லவும் விழி வைத்துக் காத்துப்படை நடத்திச் சென்றார் பேரறிஞர் அண்ணா.

இந்தப் புரட்சிப் பாசறையினின்று புறப்பட்ட எழுச்சிப் படை பெற்றுள்ள வெற்றிகள் தமிழ்ச் சமுதாய மேம்பாட்டின் முத்திரைகள். பெற்ற வெற்றிகள் நம் நெஞ்சை உயர்த்தும்.

மேலும் மேலும் நாம் நடக்கின்றோம்! நடக்கின்றோம்....!

நம் தலைவர்கட்கு நன்றிக்கடன் இதுதானே!



புரட்சிக் கவிஞனே,

உன் எழுத்து வரிகள்
எங்களின் மூச்சில் அனலேற்றின!

உன் கூரிய விழிகள்
ஒளிமிகு எதிர்காலத்தை எழுதிக்காட்டின!

உன் பாட்டுக்குரல்
பழமைப் புலிகளின் உறுமலை அடக்கிற்று.

உன் வாழ்க்கை நெறிகள்
நைந்த சமுதாயத்தைத் தூக்கி நிறுத்தின!

உன்றன் நினைவுச்சுடர்
எங்களை நிமிர்த்திக் கொண்டிருக்கிறது!

**SADIQ ALI,**
**Governor of Tamil Nadu.**

RAJ BHAVAN
MADRAS-600 022

9th December 1980

# Message

*The fifth International Conference—Seminar of Tamil Studies to be held at Madurai in January 1981 is an event of historical importance for the Tamil language and literature. The Tamil language is the soul of Tamil culture. On this occasion, we recall with gratitude all those scholars at home and abroad who have contributed to the growth of Tamil literature down the centuries. I send my best wishes.*

**SADIQ ALI,**
**Governor of Tamil Nadu.**

டாக்டர் இரா. நெடுஞ்செழியன்
எம்.ஏ., டி.லிட்.,

நிதி அமைச்சர்.

தலைமைச் செயலகம்,
சென்னை-600 009.

நாள்: 27-11-80

இலண்டன் மாநகரிலிருந்து 'மலர்ச்சி' எனும் மாத வெளியீடு தமிழ்மொழி, கலாச்சாரம் இவைகளைப் பேணி வளர்க்கும் உயர்நோக்கோடு செயல்பட்டு அருந்தொண்டு புரிந்து வந்திருப்பதை அறிந்து மகிழ்ச்சியடைகிறேன்.

தமிழ்மொழி, தமிழ்ப் பண்பாடு வளர்ந்து ஓங்கவும், உலகெங்கும் வாழும் தமிழறிஞர்களுக்கிடையே உறவை வளர்க்கும் முறையில் 'மலர்ச்சி' பணியாற்றி வந்திருப்பதை அறிந்து, தமிழ் மக்கள், தங்கள் மொழிப் பணியை ஏற்றிப் போற்றுகிறார்கள்! தமிழ் மக்களின் சார்பில் நான் என் பாராட்டுரைகளைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

உலகத் தமிழ் மாநாட்டினை யொட்டி வெளியிட இருக்கும் 'மலர்ச்சி' சிறப்பிதழ் சிறப்புடன் அமைய என் நல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இரா. நெடுஞ்செழியன்
(நிதி அமைச்சர்)

---

ம. பொ. சிவஞானம்
தலைவர்
தமிழ்நாடு சட்டமன்ற மேலவை.

புனித ஜார்ஜ் கோட்டை,
சென்னை-600 009.

நாள்: 5-12-80

இலண்டன் மாநகரிலுள்ள தமிழ் ஆர்வலர்கள் ''தமிழ் மலர்ச்சி'' என்னும் பெயரில் தமிழ் மொழியில் மாத இதழ் நடத்துவது அறிந்து மகிழ்ச்சியடைகிறேன். இந்த இதழுக்கு பிரிட்டனிலுள்ள தமிழர் எல்லோரும் ஆதரவு அளிக்க வேண்டும். ஆங்கில மொழிச் சூழ்நிலையில் இருந்துகொண்டு தமிழில் இதழைக்கொண்டு வருவது எளிதல்ல. இது தெரிந்திருக்கும் தமிழ்ப் பற்றுடைய அன்பர்கள் இந்த அரிய பணியில் துணிந்து ஈடுபட்டுள்ளனர். அவர்களுக்கு என் வாழ்த்துக்கள். உலகத் தமிழ் மாநாட்டை யொட்டி ''தமிழ் மலர்ச்சி'' சிறப்பு மலர் வெளிவரவிருப்பது அறிந்து மகிழ்ச்சியடைகிறேன். மலர் எல்லா வகையிலும் சிறந்து விளங்க இறையருளைப் பிரார்த்தித்து வாழ்த்துகிறேன்.

ம. பொ. சிவஞானம்

க. அன்பழகன்,
எம்.ஏ., எம்.எல்.ஏ.,
பொதுச்செயலாளர், தி. மு. க.,
துணைத்தலைவர், தி. மு. க. சட்டமன்றக் கட்சி

தொலைபேசி: அலுவலகம் 843965
இல்லம் 612940

நாள்: 6-12-80

அன்புடையீர்,

வணக்கம். தங்களின் சீரிய முயற்சியால் 'தமிழ் மலர்ச்சி' வெளி வருவது மகிழ்ச்சியளிப்பதாகும்.

தமிழ் மொழியில் மறுமலர்ச்சி ஏற்படவும், கலை, நாகரிகப் பண்பாடுகள் காக்கப்படவும், இலக்கிய வளம் பெருகவும், பன்னாட்டுத் தமிழர்களிடையிலும், பிறமொழி மக்களிடமும் தொடர்புகொள்ளும் ஏடாகத், 'தமிழ் மலர்ச்சி' மலர்ந்து மணம் பரப்புவது பெரிதும் பாராட்டத்தக்கது. தங்கள் முயற்சி தொடர்ந்து வெற்றிபெற உளமார வாழ்த்துகின்றேன்.

தமிழ் வாழ்க!

மலர்ச்சி வழங்கும் மணம் பரவுக!

அன்பன்,
க. அன்பழகன்

---

**V. P. MUNUSAMY**
MEMBER OF PARLIAMENT
(Rajya Sabha)

209, V. P. House,
Rafi Marg.
New Delhi-110001—Phone: 384146

70, Dr. Ambedkar St.,
Venkata Nagar. Extn., Pondicherry-11.
Phone: 3282

1981 ஜனவரியில் மதுரை மாநகரில் நடைபெற இருக்கின்ற 5வது உலகத் தமிழ் மாநாட்டை முன்னிட்டு "தமிழ் மலர்ச்சி" இதழ் சிறப்பு மலர் வெளியிடுவது குறித்து பெரு மகிழ்ச்சி அடைகின்றேன்.

கடல் கடந்து வாழும் தமிழ் மக்களுக்கு தமிழ் உணர்வையும் ஊக்கத்தையும், குடும்ப பாசத்தையும் ஊட்டி சிறந்ததொரு தொண்டாற்றி வருகின்ற "தமிழ் மலர்ச்சி" ஆல் போல் தழைத்து வளர்க வளர்க என வாழ்த்துகிறேன்.

இவண்,
V. P. முனுசாமி

**Prof. G. R. DAMODARAN,**
B. Sc. Engg., C. Engg., F.I.E.E. (Lond.,)
F.I.Nuc. E. (Lond.,) F.I.E. (Ind.), D,Sc,
Vice-Chancellor

Phone: 843074
UNIVERSITY BUILDINGS,
CHEPAUK, MADRAS-600005.

நவம்பர் 5, 1980

பேரன்புடையீர், வணக்கம்.

தாங்கள் 20-10-80இல் விடுத்த மடல் கிடைத்தது. மகிழ்ச்சி. நன்றி. கடந்த சில ஆண்டுகளாக 'மலர்ச்சி' என்ற இதழின் மூலம் தாங்கள் ஆற்றிவரும் பணிகள் குறித்து மகிழ்ச்சி.

தமிழகத்தில் மதுரையில் 1981 சனவரி திங்களில் நிகழவிருக்கும் உலகத் தமிழ் மாநாட்டையொட்டித் தாங்கள் ஒரு சிறப்பு மலர் வெளியிட விருப்பதறிந்து மிகவும் மகிழ்கிறேன். மலர் சிறந்த முறையில் வெளிவரவும் தங்கள் தமிழ்ப் பணிகள் சிறக்கவும் என் அன்பான வாழ்த்துகள்.

உலக நோக்கில் தமிழ் வளர்ச்சிப் பணிகளில் ஈடுபடுவோர் தொகை பெருகட்டும், அவர்கள் முயற்சி வெல்லட்டும். மீண்டும் தங்களுக்கு என் இனிய வாழ்த்துகள்.

தங்களன்புள்ள,
தாமோதரன்

---

**R. SIVACHANEMOUGAM**
President :
Ramalinga Mission De Paris
'Sanmarga Sangam'

9, Allee Jacques Riviere
95200—SARCELLES
Tel : 993-82-67

12 Nov. 1980

பேரன்பு நிறைந்த அப்பாசாமி அவர்கட்கு,

தாய் நாட்டினின்று பல்லாயிரம் காத தூரத்திற்கு வந்து நீங்கள் செய்து வரும் நற்றமிழறம், தந்தை தாயாரைப் போற்றிப் பணிவதைப் போன்ற தூயதொரு செயலாம்.

சுதந்தரத் தமிழ்த் தலைமைத் தலமாம் மதுரையில் நிகழ விருக்கும் 5-வது அனைத்துலகத் தமிழ் மாநாட்டை யொட்டி தமிழ் மலர்ச்சி சிறப்பு மலர் வெளிவருவது தமிழ் கற்றறிந்தோர்க்கு நல்விருந்து!

'ஞால மளந்த மேன்மைத் தமிழ்க் 'கோர் ஆரம்!
தமிழ்ச்சித்தர் இராமலிங்க வள்ளலார் போற்றிய
இயற்கை உண்மைச் சிறப்பியல் மொழி வாழ்க!
தெவிட்டாது உள்ளத்தில் தித்திக்கும் தேன்தமிழ் வாழ்க!
இறைமாண்பில் சிறந்த தமிழ் மொழி வெல்க!
உங்கள் பணிவாழ்க! தமிழ் மலர்ச்சி வாழ்க!

இன்னணம் தங்கள் அன்புள்ள,
இரத்தின. சிவசண்முகம்

**க. ரங்கநாதன்**
தலைவர்
இலண்டன் தமிழ்ச் சங்கம்

16, Jubilee Road
Perivale Greenford
Middlesex, England
27-11-80

*அன்புடையீர்,*

*தமிழாய்ந்த ஆலவாய் என்னும் மதுரை மாநகரில் உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டினை யொட்டி உலகத் தமிழ் ஏடான 'தமிழ் மலர்ச்சி' சிறப்பு மலர் வெளியிடுவது சாலவும் பொருத்தமானது.*

*'சிறப்பு மலர்' வெற்றிபெற இலண்டன் தமிழ்ச் சங்க சார்பில், தலைவர் என்ற முறையில் எனது வாழ்த்தினை தெரிவித்துக் கொள்கிறேன்.*

அன்பன்
*(ஒம்)* **க. ரங்கநாதன்**

---

**தங்கரத்தினம் முத்துக்குமாரசாமி**
செயலாளர்
இலண்டன் தமிழ்ச் சங்கம்

16, Jubilee Road
Perivale Greenford
Middlesex, England
27-11-80

*அன்புடையீர்,*

*மதுரை மாநகரில் நடைபெறவிருக்கும் ஐந்தாவது உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டினை யொட்டி 'தமிழ் மலர்ச்சி' சிறப்பு மலர் வெளியிடுவது குறித்து மகிழ்ச்சியடை கிறேன்.*

*தமிழ் இலக்கிய அறிவும், தமிழர் பண்பாடும் மேலை நாடுகளில் பரவுவதற்கு 'தமிழ் மலர்ச்சி' ஆற்றிவரும் பணி பாராட்டிற்குரியது. 'தமிழ் மலர்ச்சி'யின் சிறப்பு மலர் செவ்வனே மலரவும், மணம் கமழவும் இலண்டன் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் வாழ்த்துகிறேன்.*

இப்படிக்கு
(ஒம்) **தங்கரத்தினம் முத்துக்குமாரசாமி**

**Dr. S. NAVARATNAM,** M.R.C.P.
President,
Standing Committee of Tamil
Speaking Peoples

5, Windy Hill,
Hutton,
Brentwood,
Essex, CM 13 2 HF.

11th December, 1980

The Standing Committee of Tamil Speaking Peoples, like Tamil Malarchi, is based outside the Tamil Homelands The main objective of S.C.O.T. is to remove poverty that exists among our people and also to promote and preserve our language and culture.

S.C.O.T.'s belief is that pursuits to promote or preserve one's culture or language cannot be undertaken on empty stomachs, more so if faced with organised political oppression. Hence S.C.O.T. has endeavoured in these past years to promote self-help among these pepole, so as to make them self-reliant. Tamil Malarchi has given publicity to these endeavours and thus promoted our activities.

We are glad to learn that the 5th International Conference on Tamil Research is being held in Madurai where our language flourished and bloomed under the patronage of the Pandias. In welcoming the publication of your souvenir, we would like to convey our felicitations to the Conference and wish the organisers every success.

**S. NAVARATNAM**
President Elect
S. C. O. T.
London.




கரும்புக் குழந்தைமனம்
இரும்புக் கனமனத்தைக்
கரைக்கட்டும்.

அரும்பும் சுறுசுறுப்பு
எறும்பாய்த் துருதுருத்து
வளரட்டும்.




வயல்வெளித் தானியங்கள்
ஏற்று மதியேறக்
கனக்கட்டும்.

அயல்வெளி நாடுகளும்
புகழ்ந்திடச் செயல் விளைவு
மணக்கட்டும்.

புதுமுகப் புத்தாண்டில்
அகமலர் மதுமகிழ்வே
ததும்பட்டும்.

இதம்தரு ஊக்கமதே
நிதம்தரும் தமிழ்மலர்ச்சி
வாழ்த்துதுவே.




## புத்தாண்டு வாழ்த்துக்கள் !



# தந்தை பெரியார்

நூற்றாண்டு விழா

"பொன்"

"உயர் எண்ணங்கள் மலரும் சோலை" யென்றும், பகுத்தறிவுக் களஞ்சியம், இருண்ட 'பாமரர் வாழ்வுக்குப் பகலவன், வாடிய மக்களுக்கு வழிகாட்டி வகை செய்த வைக்கம் வீரர்' என்றெல்லாம் பாராட்டியுரைக்கப்படும் பெரியார் ஈ.வெ.ராமசாமி நாயக்கர் ஈரோடில் தோன்றியவர். ஓய்வில்லாத உழைப்பு, ஒப்புமையில்லாச் சிந்தனைத் திறன், உள்ளதை உள்ளபடிக் கூறும் நெஞ்சுரம், தன்னல மில்லாத் தியாக உள்ளம் பெரியார் என்னும் மனித வடிவத்தின் உள்ளடக்கம்.

மதம் என்ற பெயரால் மதம் பிடித்து அலைந்த மக்கள் கூட்டத்தைச் சிந்திக்க வைத்தவர். மனித பண்புக்கு மதிப்பில்லாமல் சாதி அடிப்படையிலும் பொருளாதார அடிப் படையிலும் மனிதனை எடைபோடும் சிறுமையை வெறுத்தவர். புறக்கணிக்கப் பட்ட மக்களின் வாழ்வுக்காய் புயலாகச்சீறி புரட்சி செய்து புதுவாழ்வு அளித்தவர். உழைப்பவர் ஓடாய்த் தேயும் உருக்குலைவைத் தன் உறுதியான உழைப்பால் மாற்றியவர். சமுதாய வாழ்வில் பெண்களுக்கும் சமநிலை தரப்படல் வேண்டும் என்பதை வலியுறுத்தி வகை செய்தவர். குடியரசு, கொங்குநாடு, விடுதலை, திராவிடன் என்னும் பத்திரிக்கைகள் மூலம் பகுத்தறிவுக் கொள்கைகளை நிலைநாட் டியவர். கிராமங்களின் முன்னேற்றமே நகரங் களின் முன்னேற்றம் என்பதால் புறக் கணிக்கப்பட்ட கிராம மக்களின் நலனைக் காக்கப் பாடுபட்டவர்.

மேலோட்டமாகப் பார்ப்பவர்கள், "ஈ. வெ. ரா. ஒரு குறிப்பிட்ட வகுப்பினரை வெறுத்தார்; கடவுளைப் பழித்தார்" என்று கூறுவர். ஆனால் சமுதாயத்தில் புரையோடிக் கிடந்த மூட நம்பிக்கைகளை, சாதிசமய அநீதிகளைத், தன் எண்ணத்தால், எழுத்தால் சாடி ஒழித்த சீர்திருத்த வாதி பெரியார் ஒருவரே என்பதை உணர்ந்து பார்த்தால் உண்மை விளங்கும்.

*[தமிழ் மலர்ச்சி, அக்டோபர் 78]*

# நினைவுகள் + நனவுகள் = காவியங்கள்

**'குடில்காரி'**



(மணி — 13.)

நம் வாழ்க்கை வட்டம் ஒரு கடிகாரம்.

நீ பெரிய முள். நான் சின்ன முள் ஆனால் ஒருவரை ஒருவர் குத்தாத முள்.

நீ போகும் பாதைதான் என் பாதை. உன் இயக்கத்தில்தான் என் இயக்கம் அடங்கிக் கிடக்கிறது. ஏனென்றால் உன் பயணத்தின் ஒவ்வோர் அடிச்சுவடும் என்னை நோக்கியே அமைந்தது.

சுறுசுறுப்பான உன் போக்கே நம் வாழ்வில் விறுவிறுப்பைக் கூட்டுவதல்லவா? உனக்கு எப்பொழுதும் அவசரம் ... பரபரப்பு. கொஞ்ச நேரம் கூட நின்று நிதானிக்கப் பொழுதில்லை. திரும்பிப் பார்ப்பது உன் இயல்பில்லை. அதுவே உன் அருமையை, பெருமையைப் பிறரிடம் இருந்து உயர்த்திக் காட்டும் தனிப்பண்பு அல்லவா?

நானோ நீ சென்ற பாதையிலே அடிச் சுவட்டிலேயே நடைபோடும் விந்தைப் பிறவி. உன்னைப்பற்றிய சிந்தனையிலே மோனத் தவத்திலேயே மெல்ல – நம்பிரிவுக் கால நகர்வாக – நகரும் பிறவி. எனக்குள் என்னையே, அந்த 'என்னை'க்குள் உன்னையே பிணைத்துக் கொண்டு நகரும் பிறவி.

பிறருக்கோ நம் வாழ்க்கை வேடிக்கையாக உள்ளது. எனக்கோ, உனக்கோ பல்சுவை கூடிக் கிடக்கும் வாழ்க்கை ஆக உள்ளது. ஏனெனில் 'நம்பிக்கை' மையத்தில் இருகையும் இணைந்த தெய்வீக வட்டமல்லவா இது? வெற்று வட்டமில்லையே.

கண்ணன் கைப்பட்ட பாஞ்சாலி புடவையாக, கடலில் ஏற்படும் பல்லாயிரம் கோடி அலைகளாக ............... பல்சுவை கூடிவரும் வாழ்க்கை நம்முடையது.

அது சரி ...... எனக்கு திடீரென்று ஒரு சந்தேகம் ...... என்பாதையில் நீ செல்கிறாயா உன்பாதையில் நான் செல்கிறேனா?......... என் நினைப்பில் நீ ஓடுகிறாயா? இல்லை உன் நினைப்பில் நான் நகர்கிறேனா?

எது எப்படி இருந்தாலும் சரி. நம்

வாழ்க்கை வட்டமாகவே இருக்கட்டும். வேறு எந்த வடிவத்திலும் இருக்க வேண்டாம். ஏனென்றால்........... அப்பொழுதான் நாம் 'மணிக் கொரு முறை' சந்தித்துக் கொள்ளலாம்.

(மணி — 14.)

அது சரி. ? விழாக்காலத்தில் மட்டுமே நீ அணிகிற 'கோட்' டாக வைக்காது, என்றைக்குமே நீ அணியும் ஆடையாக என்று என்னை ஏற்றுக் கொள்ளப் போகிறாய்?

விருந்துக் காலத்தில் மட்டுமே உண்ணும் பல்சுவைப் பண்டமாக என்னைக் கொள்ளாது எப்பொழுதும் பசி தீர்க்கும் சோறாக என்றைக்கு என்னை ஏற்கப் போகிறாய்?

மாலைப் பொழுது சோலைப்பக்கச் சாலையில் நடைபோடும் போது நுகர்கின்ற மல்லிகை மணமாக என்னைக் கருதாது, எப்பொழுதும் நீ இழுத்து விடுகின்ற மூச்சுக் காற்றாக என்றைக்கு என்னை ஏற்கப் போகிறாய்?

(மணி — 15.)

உன்னிடம் இருந்து வரும் மடல்,

பன்னிரண்டு ஆண்டுகட்கு ஒரு முறை மலை வெளியில் மட்டுமே மலர்கின்ற குறிஞ்சி மலராக,

திங்களொரு முறை உலகையே பால் ஒளியில் நனைத்துத் தான் ஈரமாகாது, வாடைக்காற்றில் வானுச்சியில் ஏறிக்கொண்டிருக்கும் முழு நிலவாக,

வசந்தகாலத்தில் மட்டுமே பூக்கும், அனைவரையும் சொக்க வைக்கும் வாசமலர்க் கூட்டமாக

இருக்க வேண்டாம்

அன்றாடம் என் அறைமுன்னால், அறைக்குள் உன் நினைவில் அமிழ்ந்து என்னை மறந்திருக்கும் நிலையிலும் இடை இனிடையே அமிழ்து தன்னை நினைப் பூட்டிவிடும் தன்மையோடு, மணக்க மணக்க மலரும் 'நாலுமணிப்பூ' ஆகிய அந்தி மந்தாரை மலராக,

தினந்தோறும் காலை மலரும் முன் கீழ் வானத்தில் பளிச்சிடும் விடிவெள்ளியாக,

அலுக்காது அனுதினமும் வந்து என் அறையில் வாளியில் மலர்ந்துள்ள ரோஜாச் செடிகளை, ஆதரவாய்க் கணப்பொழுதேனும் அணைத்துவிட்டுக் கடமைப் பறவையான உன்னைபோலப் பறந்து செல்லும் தென்றலாக

இருக்கட்டும்.

ஏனெனில்,

எப்பொழுதுமே உன் மடலை, நான் குறிஞ்சி மலராகவே முழுமதியாகவே, வசந்த காலப் பூக்களாகவே கருதுகிறேன்.

'மலர்ச்சி' ஏப்ரல் 1977.

---

## 'விகடனின்' தபால் தலை

ஆனந்த விகடன் பொன் விழாவையொட்டி இந்திய அரசு சிறப்புத் தபால் தலை வெளியிட்டது. தமிழ்நாடு போஸ்ட் மாஸ்டர் ஜெனரல் பி. எஸ். ராகவாச்சாரி தபால் தலையை வெளியிட, விகடன் ஆசிரியர் எஸ். பாலசுப்ரமணியன் அதனைப் பெற்றுக்கொண்டார். இதனால் தமிழ்ப் பத்திரிகை உலகம் கொஞ்சம் தலை நிமிர்ந்து நடக்கிறது.

கலந்துரையாடல்:

# திருமதி டெபோரா தியாகராசனுடன் பேட்டி!

*(உரையாற்றியவர்கள்: திரு. ஜான் சாமுவேல், திரு. அழகன்)*



செல்லப்பெண்ணுடன் அன்னையும் தந்தையும்

(தமிழுலகம் அறிந்த திரு. கருமுத்து, தியாகராசன் செட்டியாரின் பேரன் திரு. கே. எம். தியாகராசன், அமெரிக்க நங்கை 'டெபோரா டீல்' ஐத் திருமணம் செய்துள்ளார். கனிந்த காதல் மணத்தில் முடிந்து, மணக்கும் வாழ்வில் நிறைவுகொண்டுள்ள அந்த இதயத்துடன், அங்கு பேட்டி கண்டவர்கள் திரு. ஜான் சாமுவேலும் அழகனும்)

*கேள்வி: வேற்று மொழியினரான, ஒரு தமிழரை மணம் புரிந்துள்ளீர்கள். கலப்பு மணம் நன்மையா?*

*பதில்:* இத்தகைய கலப்புத் திருமணம் இன்றைய உலகிற்கு மிகவும் நல்லது. இந்தியக் குடும்பங்களில் குடும்பவாழ்க்கை நெருக்கமாக அன்புத்தளையால் பிணைக்கப்பட்டுள்ளது. இத்தகைய அன்பான இந்தியக் குடும்ப வாழ்க்கையை அனுபவிக்க வாய்ப்புப் பெற்றிருக்கும் நான் உண்மையிலேயே ஒரு அதிர்ஷ்டசாலிதான். பல நாடுகளிலும் கல்வி பயிலும் வாய்ப்பு எனக்கு ஏற்பட்டதால் குறுகிய மனப்பான்மை என்னிடம் ஏதுமில்லை.

அச்சத்திலேயே திருமணங்களை மேற்கொள்வதால் மேல்நாடுகளில் விவாகரத்துக்களும் சாதாரணங்களாகி விடுகின்றன. உறுதியோடு மணவாழ்வினைத் தொடங்குவதால் இந்தியர்களின் மணவாழ்க்கை அசைக்க முடியாததாக அமைகிறது.

*கேள்வி: பிறந்த நாட்டைவிட்டு வந்து, ஒரு இந்திய குடும்பத்தின் நடைமுறைக்கு உட்பட்டு*

*வாழமுற்படுகையில் உங்களுக்கு ஏற்பட்ட பிரச்சனைகள் என்னென்ன?*

ப. என்னுடைய கணவர் குடும்பத்தைச் சார்ந்தவர்கள் பொதுவாகத் தங்கள் சமூகத்திலேயே பெண்ணெடுக்கும் உரிமையுள்ளவர்கள். அப்படியிருகக நான் மேல்நாட்டு மருமகளாக வந்ததால் முதலில் தயங்கத்தான் செய்தனர். ஆனால் தற்போது அன்பாகப்பழகுகிறார்கள். எனக்கு மூன்று பெண்குழந்தைகள் இருக்கிறார்கள்.

*கே. உங்கள் பிறந்தகத்தோடு உள்ள தொடர்பை நீடிக்கிறீர்களா?*

ப. என் தந்தை இங்கு இருமுறையும், தாய் ஐந்து முறையும் வந்துபோயிருக்கிறார்கள். இந்தியாவிற்கு வரவே மாட்டேன் என்ற என்தந்தை இங்கு வந்ததும் மகிழ்ந்து போனார்.

என்னுடன் பிறந்த சகோதரன் பல் டாக்டராக இருப்பதோடு வியாபாரமும் செய்கிறார். தங்கை டாக்டராக இருக்கிறாள்.

நான் பிறந்த வீடும், புகுந்த வீடும் பொருளாதாரச் சூழலில் நல்ல நிலையில் இருப்பதால் அடிக்கடி அவர்கள் வந்து போகவும், நாங்கள் போய்வரவும் வசதியாக உள்ளது.

என் கணவரோடு இங்கு வாழ்கின்ற இந்த வாழ்க்கை முறை எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது.

*கே. இந்தியப் பெண்களைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்?*

ப. படித்து உத்தியோகம் பெற்ற பெண்கள் மேனாடுகளில் உரிமை பெற்றவர்களாக இருப்பர். ஆனால் இந்தியாவில் அப்படி இல்லை.

வயல்வெளிபோன்ற இடங்களில் கூலி வேலை செய்வதில் கூட ஆண்களைவிடப் பெண்களுக்குக் கூலி குறைவு. இதிலும் சமத்துவம் இல்லை.

நடுத்தர குடும்பங்களில்கூட பெண்களை உத்தியோகம் பார்க்கும் நிலைக்கு அதிகமாக ஊக்குவிப்பதும் இல்லை. திறமைகள்இருந்தும், கல்வியறிவு பெற்றும், வீடுகளில் அடைபட்டுக் கிடக்கிறார்கள்.

பெண்களின் கற்புக்குப் பயந்தே பெற்றோர்கள் வேலைக்கு அனுப்ப மறுக்கிறார்கள் என்பதை வன்மையாக மறுக்கிறேன். ஒரு பெண்ணின் கற்பு அந்தப் பெண்ணின் கையில் தான் இருக்கிறது. அதைப் பாதுகாக்கும் வலிமையும் அவளுக்கு உண்டு. அப்படியிருக்க பெண்களை வலிமையிழந்தவர்கள் என மதிப்பிடுவது அவ்வளவு புத்திசாலித்தனமாகப் படவில்லை.

*கே. மேல்நாடுகளில் பெற்றோர் பிள்ளைகள் உறவு முறை பற்றி...?*

ப. மேனாடுகளில் பெண் குழந்தையையும் ஆண் குழந்தையையும் சமமாகவே கருதுகிறார்கள். வரதட்சணையும் கிடையாது. சொத்தில் பெண்ணுக்கும் ஆணுக்கும் சம உரிமை உண்டு.

பிள்ளைகள் சம்பாதிக்கத் தொடங்கியதும் பெற்றோர்கள் பணஉதவி செய்வதை நிறுத்தி விடுகிறார்கள். பிள்ளைகளிடமிருந்தும் பெற்றோர்கள் பணஉதவி எதிர்பார்ப்பதில்லை.

பணத்தைப் பொறுத்தவரை ஒருவரை ஒருவர் சார்ந்து நிற்கக் கூடாது.

அதிகமான அமெரிக்கக் குடும்பங்களில். மகன் தொழில் ஆரம்பிக்க தந்தை, பணம் தருவார். மகன் அந்தப் பணத்தைக் தவணை முறையிலோ, ஏதோ ஒரு முறையிலோ திருப்பித்தந்துவிடுவான்.

திருமணங்கள் அங்கு முழுமையாகக் காதல் திருமணங்களே, பெற்றோர்கள் பெரும்பாலும் தலையிடுவதில்லை. பிள்ளைகளின் மகிழ்ச்சி அவர்களது குறிக்கோள்.

சிறு வயதிலிருந்தே குழந்தைகளுக்குத் தாங்களாகவே முடிவெடுக்கக் கற்றுத்தருகின்றனர்.

***கே. தமிழ்மொழியைக் கற்றுக்கொள்வதில் பிறமொழியினருக்கு உள்ள சிக்கல்கள் என்ன?***

ப. கற்பதற்கு அரிய மொழிகளாக அரபி, சீனம் ஆகிய மொழிகளை முதல் நிலையிலும் தமிழை அடுத்த நிலையிலும் மேல்நாட்டார் பாகுபடுத்துகிறார்கள்.

மேல்நாட்டு மொழிகளில் இல்லாத பல ஒலிகள் தமிழில் உள்ளதால் நாவை அசைத்து அவற்றையெல்லாம் புதிதாக உச்சரிக்கப் பழகிக்கொள்ள வேண்டியிருக்கிறது.

தொடரமைப்பு மேல்நாட்டு மொழிகளிலிருந்து வேறுபடுவதால் புதிய தொடரமைப்புக்களை அதிக முயற்சியெடுத்துக் கற்றுக்கொள்ள வேண்டியுள்ளது.

பேச்சுத் தமிழையும், எழுத்துத் தமிழையும் தனித்தனியாக கற்கவேண்டிய நிலை மிகவும் சிரமமாக உள்ளது. இந்த வேறுபாடு மேனாட்டு மொழிகளில் அதிகமாக இல்லை.

தொடரமைப்பு மாவட்டங்கள் தோறும் மாறுபடுவதால் பேச்சுத்தமிழைக்கூட எளிதில் புரிந்துகொள்ள இயலவில்லை.

வெளிநாட்டவர்கள், சிறிய கிராமங்களில் தங்கியிருந்தால் மட்டுமே தமிழை அறிய முடிகின்றது. ஏனெனில் நகரத்தில் வாழும் படித்த தமிழர்கள் ஆங்கிலத்தில் பேசுவதையே விரும்புகின்றார்கள்.

பழந்தமிழ்க் கவிதைகளை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கும்போது சுவை குன்றுவதோடு, சூழ்நிலைகளையும் சிறப்பாக உணர முடியவில்லை.

***கே. தமிழ்மொழி பற்றி என்ன நினைக்கிறீர்கள்?***

ப. தமிழ் வளமான மொழி (Rich language) செம்மையான மொழி (Classical language) பழந்தமிழ் இலக்கியங்கள் மிகவும் அழகாக உள்ளன. சில சொற்களில் எண்ணற்ற உணர்வுகளை வெளிப்படுத்துகின்றன. சிறிய கவிதைகளாக இருப்பினும் நீண்ட நிகழ்ச்சிகளை உள்ளடக்கி நிற்பது சிறப்பாக உள்ளது குறுந்தொகைப் பாடல்களை நான் மிகவும் ரசிக்கிறேன். பழந்தமிழ்க் கவிதைகளோடு ஒப்பிடும்போது நான் கற்ற சில தற்காலக் கவிதைகள், அவ்வளவாக சிறப்பாக இல்லையென்றே எனக்குத் தோன்றுகிறது. தொடரமைப்புகள் நீண்டதாகவும், வளமாகவும் இருக்கின்றன.

சமுதாய மாற்றத்திற்கு ஏற்பத் தமிழ் மொழி மாறவில்லையென்றே நான் நினைக்கிறேன். தூய்மை கெடாமல் இன்றைய சூழ்நிலைக்கு ஏற்றவாறு வளமடையச் செய்ய வேண்டும். பேச்சு மொழிக்கும் எழுத்து மொழிக்கும் இடையில் உள்ள பெரிய வேறுபாடு மொழிவளர்ச்சியைப் பெரிதும் பாதித்து விடும். தமிழில் இவ்விடைவெளி பெரிதாக உள்ளது. இந்த இடைவெளியை முடிந்த அளவிற்குக் குறைக்க முயலவேண்டும்.

பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் ஆங்கிலத்திற்குச் சிறப்பளித்துத் தமிழுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படாததால், படித்துப் பட்டம் பெறும் தமிழ்நாட்டின் இளந்தலைமுறையினரால் தமிழ்மொழியைச் சிறப்பாகக் கற்கவும், வளமைப்படுத்தவும் முடியாமற் போகிறது. இக்கருத்து எல்லா இந்திய மொழிகளுக்குமே பொருந்தும் என்று கருதுகிறேன்.

***கே. தமிழ் மக்களிடம் நீங்கள் காணும் குறைபாடுகளைத் தயங்காமல் கூறுங்களேன்.***

ப. இணைந்து, திட்டமிட்டு சாதனைகள் புரியத் தயங்குகின்றனர்.

பிறருக்குப் பயன்படும் உண்மைகளை மனந்திறந்து வெளியிடவும் தயங்குகின்றனர்.

தன் வளர்ச்சியில் அதிக அக்கறையும் பிறர் வீழ்ச்சியில் அதிக நாட்டமும் காட்டுகிறார்கள்.

பழைய சடங்குகளைப் பொருள் புரியாமல், சமுதாய மாற்றத்தையும் உணராமல், அவற்றின் தேவையினை உணராமல்—கண்

மூடித் தனமாகப் பின் பற்றுகின்றனர். இணை யும் சமயத்தில் அளவுகடந்த அன்பும், வெறுக்கும் நேரத்தில் அளவு கடந்த பகை மையும் காட்டுகிறார்கள்.

அரசியல் முன்னேற்றம் மிகவும் மெது வாகவே உள்ளது பொதுச் சொத்துக்கள் மீது மக்கள் அதிகப்பற்று வைப்பதில்லை. அவற்றை ஆளும் கட்சியின் சொத்தாகவே கருதுகிறார்கள்.

*கே. தமிழ் மக்களிடம் நீங்கள் கண்ட சிறப் புக்கள் என்?*

ப. நேர்மையானவர்கள். எளிமையான வாழ்வினர். உயர்ந்த சிந்தனை. சின்சியர்.

இந்தியாவின் பிறபகுதியினர் மேனாட்டு மோகத்தில் மூழ்கி மேனாட்டு நாகரிகக் கூறு களைக் கிரகித்துக் கொண்டு விரைவாகமுன் னேறத் துடிக்கின்றனர். ஆனால் தமிழ்நாட்டு மக்கள் மேனாட்டு நாகரித்தின் சிறந்த கூறு களை மட்டுமே ஏற்றுக் கொண்டு முன்னேற் றப் பாதையில் சிந்தித்து அமைதியாக அடி யெடுத்துவைத்து முன்னேறுவது சிறப் பானது.

அதோடு, தங்கள் கலாச்சார மரபுகளை மதித்துப்போற்றும் மனப்பான்மை தமிழ் நாட்டு மக்களிடம் அதிகமாக உள்ளது.

குடும்பங்கள் நெருக்கமாக, அன்புத் தளையால் பிணைக்கப் பட்டிருக்கின்றன. மேனாட்டு நாகரிகச் சூழல் தனித்த மனிதர்கள் நிறைந்த சமுதாய போக்கு வளரத் துணை செய்ய, தமிழ்நாகரிகப் போக்கு, இணைந்த அன்பு வாழ்க்கை சிறக்க துணைபுரிகிறது.

ஆன்மீக வாழ்விற்கு அதிக முக்கியத் துவம் தருகிறார்கள்.

*மானிடவியல் நோக்கில் தற்கால சமுதாய அமைப்புமுறை பற்றிய உங்கள் கருத்துகளைக் கூறுங்களேன்.*

அயன்மை உணர்ச்சி (Sense of alienation) மேல்நாட்டு மனிதனிடம் மிகுந்து காணப்படுவதால், தான்யார்? என்பதையே புரிந்துகொள்ள முடியாதவனாய், நம்பிக்கை வறட்சியுள்ளவனாகக் காணப்படுகிறான்.

இத்தகைய அயன்மை உணர்ச்சிக்குத் தொழில் மயமான நாகரிகமே அடிப்படைக் காரணம்.

இந்தியாவில் இத்தகைய நாகரிகத்தின் ஆதிக்கம் குறைந்த அளவில் உள்ளதால் இந்தியரிடம் அயன்மை உணர்ச்சி குறைந்து இணைவு மனப்பான்மை மிகுந்துள்ளது.

இந்தியாவில் வறுமை ஒழியவேண்டும். அதற்காக இங்கிருக்கும் இணைவு மனப்பான்மை ஒழிந்து விடக் கூடாது. அதோடு பழைய மரபின் சிறந்த கூறுகளையும் அழிந்து போக விடக்கூடாது.

*'தமிழ் மலர்ச்சி'* நவம்பர் 78



# 'மேலை நாடுகளில் தமிழியல்' ஓர் வேண்டுகோள்!

டாக்டர் அ. தாமோதரன்
தெற்காசிய நிறுவனம், ஹைடல்பெர்க் பல்கலைக் கழகம்,
ஹைடல்பெர்க், மேற்கு ஜெர்மனி.

## வரலாறு

தமிழ் மண்ணுக்குச் சமயத் தொண்டாற்ற வந்த மேலைப் புலப் பாதிரிமார்கள், ஏறக் குறைய முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு தமிழியலுக்கு ஊன்றிய வித்து, ப்ரொயன்சா, சீகன்பால்கு, வீரமாமுனிவர், பப்ரிசியுஸ், கிரவுல், முசே, துய்புய் போன்ற தூயவர்கள் உரமூட்டியும், கால்டுவெல், போப், ட்ரு, ரோட்லர், வின்ஸ்லோ பைத்தான், ப்ளாக் போன்ற மூதறிஞர்கள் நீரூற்றியும், இந்திய வியல் போலப் பெருமைப்படும் அளவிற்குத் தமிழியல் வளர்ந்தோங்கவில்லை. நூறு ஆண்டுகளுக்கு மேலாக ஐரோப்பியப் பல்கலைக்கழகங்களில் தமிழ் கற்பிக்கப்பட்டாலும் தமிழியல் போதிய அளவு பரவவும் இல்லை; செல்வாக்கு பெறவும் இல்லை. கசப்பான, ஆனால் நாம் ஒப்புக்கொள்ள வேண்டியதோர் உண்மை இது. வெறும் மிகைப்படுத்துதல் இல்லை.

## தேக்க நிலை

இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் தமிழியலுக்கு ஒரு புதுத் திருப்பம் ஏற்பட்டது. இதனால் வளரத்தொடங்கிய தமிழியல் ஆர்வம் 1950க்குப் பிறகு ஒரு விறுவிறுப்பாக மாறியது. 1964 இல் உருவான உலகத் தமிழாராய்ச்சிக் கழகம் இந்த நிலைமையை மேலும் பலப்படுத்தியது. இதன் விளைவாக ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் உள்ள பதினைந்து பல்கலைக்கழகங்களில் இன்று தமிழ் கற்பிக்கப்படுகிறது. வேறு சில கல்வி நிலையங்களில் தமிழியல் ஆராய்ச்சிக்கு, வாய்ப்பு அளிக்கப்படுகிறது. இப்படி முப்பது ஆண்டுகளாக விரைந்து வளர்ந்த தமிழியல், கடந்த இரண்டு ஆண்டுகளாகத் தேங்கத் தொடங்கிவிட்டது. இந்த தேக்க நிலைக்குப் பல்வேறு பொதுக் காரணங்கள் இருந்தாலும். தமிழியலுக்கு மட்டுமே பொருந்தும் சிறப்புக் காரணங்கள் சிலவும் உண்டு. அவற்றை

எடுத்துக்காட்டி இந்த நிலையை மாற்றிச் சீர்படுத்துதற்குரிய வழிவகைகளைக் குறிப்பிடுவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

### காரணங்கள்

வடமொழியைக் கற்பிப்பதே இந்தியவியல் என்ற தவருன கொள்கையை மேலைநாட்டு அறிஞர்கள் பலர் இன்னும் விடாப்பிடியாகக் கொண்டிருப்பது, விடுதலைக்குப் பிறகு தேசிய மொழிப் பிரச்சனையில் இந்திய அரசு தெளிவற்ற போக்கைக் கடைப்பிடிப்பது, தமிழ்மொழியின் கடின இயல்புகளைத் தாய்மொழி என்பதனால் இனங்கண்டுகொள்ளாதது முதலியவற்றை இப்போதைய தேக்க நிலைக்குச் சிறப்புக் காரணங்களாக் குறிப்பிடலாம். இவற்றுள்ளும் முன்னைய இரண்டைக்காட்டிலும், மூன்றாவதே தமிழறிஞர்களின் கவனத்திற்கு உரியதாகும்.

### மொழியின் இயல்பு

தமிழ் இனியது; ஆனால் நாம் நம்புவது போல எளியது அல்ல. தாய்மொழி என்பதால் இந்த உண்மை நமக்கு எளிதாகப் புலப்படுவதில்லை. இதனைப் பிறமொழியாளர்கள் சுட்டிக்காட்டினாலும், உடனடியாக நாம் ஏற்றுக்கொள்வதும் இல்லை. பிறமொழியாளர் கண்ணோட்டத்திலிருந்து இந்த உண்மையை நுணுகி நோக்கி அந்தக் கடினப் பாங்குக்கு ஈடாகும் வகையில் — தமிழைக் கற்க முயலும் பிறமொழியாளர்களுக்கு உதவும் வகையில் — பணியாற்றித் தமிழியலுக்குப் புதியதொரு கடைதிறப்பு விழா நடத்த வேண்டும். அப்படிச் செய்தாலன்றித் தமிழியல் மீது ஆர்வம் மிகாது. ஆர்வம் மேலோங்கிவிட்டால் மற்றைய காரணங்கள் தமிழியலின் வளர்ச்சியை நெடுங்காலம் தேக்கி நிறுத்திவிட முடியாது. எனவே இன்றைய தேக்க நிலையைப் போக்கத் தமிழியல் துறையில் அடிப்படைப் பணிகள் சிலவற்றை நாம் உடனடியாக நிறைவேற்ற வேண்டும். இன்றேல் இந்தியவியல் ஆராய்ச்சியில் தமிழியல் வெறும் பிற்சேர்க்கையாக அல்லது அடிக்குறிப்பாக நின்றுவிடும்.

### நூலடங்கல்

எந்தவொரு ஆராய்ச்சித் துறைக்கும் செம்மையான பாதையை அமைத்துத் திறமான புலமையை வளர்க்க உதவுவது நூலடங்கல் (Bibliography) ஆகும். ஆய்வு நெறியில் நிகழும் தவறான போக்குகளை மாற்றிப் பிழைக் கோட்பாட்டுகளைத் திருத்தி இரட்டிப்புப் பணிகள் தொடராமல் தடுத்துப் புத்தம் புதிய அறிதுறைகளை உருவாக்கத் துணை செய்வதும் நூலடங்கலேயாகும். ஒரு துறையில் நிறைவேறிய ஆய்வுப் பணிகளைத் தொகுத்துக் காட்டும் பட்டியலாக மட்டுமே நூலடங்கலைக் கருதக் கூடாது. மாறாக ஒரு துறையில் நிகழும் ஆராய்ச்சியின் வளர்ச்சியை—அதன் பரப்பு, எல்லை உள்ளிட்ட அதன் வரலாற்றையே தெற்றென எடுத்துக்காட்டும் கையேடு அது, என்பதை நினைவில் கொள்ளவேண்டும். இத்தகைய நூலடங்கல் ஒன்று தமிழியலுக்கு இன்றுவரை இல்லை. இனிமேல்தான் அது உருவாக வேண்டுமென்பதில் மாற்றுக் கருத்து இருக்க முடியாது.

### பாட நூல்கள்

1716இல் சீகன்பால்கு வெளியிடத் துவங்கியது முதல், பிறமொழியாளர்கள் தமிழைப் பயில்வதற்கென இருமொழி இலக்கணங்கள் தொடர்ந்து வந்துகொண்டிருக்கின்றன. அதன் விளைவே எண்பதுக்கு மேற்பட்ட தமிழ் இலக்கணங்கள், வெவ்வேறு மொழிகளில் எழுதப்பட்டுள்ளன. என்றாலும் விரல் விட்டு எண்ணும் சிலவற்றைத் தவிர மற்றவை அனைத்தும் குறைபாடு உடையவைகளே ஆகும். இலக்கிய நடையும் பேச்சு நடையும் ஒருங்கிணைந்து காலந்தோறும் மாற்றமும் வளர்ச்சியும் பெற்றுக்கொண்டிருக்கும் தமிழைப் போன்றதொரு தொன்மொழிக்கு இந்த இலக்கண நூல்கள் போதா. இன்னும் தோன்ற வேண்டும். இலக்கணங்களைத் தவிரவும் உரைநடைக் கோவைகள், செய்யுட்கோவைகள், கதை மஞ்சரிகள், பயிற்சி நூல்கள், இலக்கண அட்டவணைகள் உச்சரிப்பு நூல்கள், வாக்கியப் பயிற்சி நூல்கள் என்று பலதிறப்பட்ட பாடநூல்கள்

வெளிவர வேண்டும். வடமொழியைப் பயில்வோருக்குக் கிடைக்கும் பாடநூல்களின் அளவில் பத்தில் ஒரு பங்குகூடத் தமிழ் பயிலும் மாணவர்கட்குப் பாட நூல்கள் கிடைப்பதில்லை; கிடைப்பவையும் தரமானவைகளாக இல்லையென்ற உண்மையை அறியாத தமிழியல் அறிஞர்கள் இருக்க முடியாது.

## அகராதிகள்

அயல் மொழியைக் கற்பவர்களுக்குப் பாட நூல்களை அடுத்துத் தேவைப்படுவது நல்ல அகராதிகள் ஆகும். 17–ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் ப்ரொயன்சா என்னும் பெருமகனால் தோற்றுவிக்கப்பட்ட இருமொழி அகராதித்தொகுப்புப் பணி அகராதியியலில், கடந்த முந்நூறு ஆண்டுகளில் நன்றாக வேரூன்றி விட்டது. எனவேதான் இருமொழி அகராதிகள், பன்மொழி அகராதிகள், சொற்களஞ்சியங்கள், சொல்லடைவுகள், கலைச் சொல்லகராதிகள் என்று பல்கிப் பெருகி இன்று ஐந்நூற்றுக்கு மேற்பட்ட பன்மொழி அகராதிகள் தமிழில் காணப்படுகின்றன. ஆயினும் இவற்றுள் நான்கைந்தைத் தவிர மற்றவை எல்லாம் ஏதாவது ஒரு வகையில் குறைபாடு உடையவையே. நல்ல அகராதிகளாகக் கருதப்படும், நான்கைந்தும் மிகமிகப் பழமையானவை. அகராதியியலில் புதிய கோட்பாடுகளும் நெறிமுறைகளும் வளர்ந்துள்ள தற்கால நிலைமைக்கு மிகவும் பிற்பட்டவையாகும். பிறமொழியாளர்கள் இன்றைய தமிழைத் தெளிவாகப் பயிலவும் தமிழில் விளைந்துள்ள பொருள் மாற்றங்கள் எல்லாவற்றையும் அவர்களுக்குப் பிழையற பயிற்றுவிக்கவும் பயன்படக்கூடிய அகராதிகள் இல்லவே இல்லை. இத்தகைய அகராதிகள் இனிமேல்தான் திட்டமிட்டு உருவாக்கப்பட வேண்டும்.

## மொழி பெயர்ப்புகள்

தமிழிலக்கியப் போக்கையும் வளத்தையும் இலக்கிய நயத்தையும் மேம்பாட்டையும் பிறமொழியாளர்கள் எடுத்த எடுப்பில் மூலத்திலிருந்தே நேராகப் படித்தறிவது என்பது ஒரு விழைவாகலாமேயன்றி நடைமுறைக்கு ஒத்துவராது. சங்க இலக்கிய மாண்புகள், அற நூல்களின் கருத்தாழம், பக்திப்பாக்களின் சுவை, பெருங்காப்பியங்களின் காவிய நலம், புராணங்களின் பெருமை என்பவற்றோடு பாரதியார், பாரதிதாசன், கண்ணதாசன், காமராசன் போன்ற இக்காலக் கவிஞர்களின் கவிநடை கல்கி, மு. வ., அகிலன், ஜெயகாந்தன், நீல பத்மநாபன், லட்சுமி முதலியோரின் உரைநடை ஆகியவற்றை நாம் பிறமொழியாளர்களுக்கு அறிமுகப்படுத்த வேண்டுமென்றால், இவற்றின் சுவையை அவர்களுக்கும் உணர்த்த வேண்டுமென்றால் இவற்றில் கணிசமானவற்றை நாம் மொழிபெயர்த்தாக வேண்டும். இதுவரையில் வெளிவந்துள்ள மொழிபெயர்ப்புகளைத் தமிழிலக்கியப் பரப்போடு ஒப்பிடும்போது இத்துறையை நாம் வளர்க்கவில்லை என்ற உண்மை தெளிவாகாமல் போகாது. நம்முடைய இலக்கியச் செல்வங்களைப் புறவுலகுக்கு வழங்காமல் வெளிநாடுகளில் தமிழியலை வளர்ப்பது முடியாதல்லதா?

## பலதுறை நோக்கு

மொழிநிலையில் தமிழைக் கற்பிப்பதோடன்றியும் தொடர்புள்ள பல துறைகளை அதனோடு இணைத்தும் அதன் பரப்பை விரிவாக்கவேண்டும். தமிழர்களின் பண்பாடு, நாகரீகம், வரலாறு, சமயம்; காதல், வீரம், அறம் பற்றிய தமிழ்க் கோட்பாடுகள்; தமிழ் மக்களின் அரசியல் அமைப்பு, சமுதாய போக்கு. ஆன்மீகக் கொள்கை; தமிழர்களின் நம்பிக்கைகள், சடங்கு முறைகள் போன்ற நாட்டுப்புறக் கலைகள்; தமிழரின் குடும்ப அமைப்பு, மணவினை முறைகள், சொத்துரிமைகள் ஆகிய எல்லாக் கோணங்களைப் பற்றியும் ஆராய்ச்சி அமையும் வகையில் தமிழியலை விரிவுபடுத்த வேண்டும். இல்லையானால் நாளடைவில் தமிழியல் குறுகிச் சுருங்கி வெறும் மொழிக் கல்வியோடு நின்று விடும்.

## தகவல் தொடர்புகள்

வெளி நாட்டுப் பல்கலைக் கழகங்களிலும் உயர் கல்வி நிலையங்களிலும், பல தரப்பட்ட நிலைகளில் தமிழ் கற்பித்தலும் தமிழியல் ஆராய்ச்சியும் நடைபெறுகின்றன.

இந்தப் போக்கு செழிப்பாக வளர்ந்து செயற்பட வேண்டுமானால் இத்துறையில் ஈடுபட்டுள்ள அனைவரிடையேயும் நல்ல தொடர்பு இருத்தல் வேண்டும். நிறுவனங்களும் ஆராய்ச்சியாளர்களும் உறவும் ஒத்துழைப்பும் கொண்டிருக்க வேண்டும். தமிழியல் துறையில் நடைபெறும் கல்விப் பணிகள், மேற்கொள்ளப்படும் திட்டங்கள், சமர்ப்பிக்கப்படும் டாக்டர் பட்டக் கட்டுரைகள் முதலியவற்றைப்பற்றி ஆண்டுதோறும் ஆய்வறிக்கைகள் வெளியிடப்பட வேண்டும். அறிஞர்கள் தாம் கண்ட ஆய்வு முடிவுகளை வெளியிடுவதற்குரிய தரமான பத்திரிக்கைகள் இருக்க வேண்டும். தமிழியலைப் பொறுத்தவரையில் மேற்கூறிய எல்லாமே ஒட்டு மொத்தமாகத் தேவைப்படுகின்றன அவ்வப்போது ஓரிரு முயற்சிகள் செய்யப்பட்டாலும் அவை பெயரளவில் தொடங்கப்பட்டு சுய்விளம்பரத்தோடு நின்று விடுகின்றன. இந்த நிலை மாறவேண்டும்.

## ஒரு நிலைப்போக்கு

தமிழ்மொழியின் சிற்சில பகுதிகள் இயல்பாகவே கடினமானவையெனப் பிறமொழியாளர்களால் கருதப்படுகின்றன. தமிழ் தெரியாதவர்களுக்குத் தமிழைப் பயிற்றுவிக்கும் ஆசிரியர்களும் இக்கூற்றை ஏற்றுக் கொள்கிருர்கள். இந்தப் போக்கை மாற்றுவதற்கு நாம் சிறிது கூட முயலவில்லை. உதாரணமாகத் தமிழ் லெக்சிகன் வெளிவந்து நாற்பதாண்டுகள் ஆகியும் தமிழ்ச் சொற்களின் அகரவரிசை முறையில் ஒரு நிலையோட்டத்தைக் காண முடியவில்லை. தமிழை ஒலிபெயர்ப்பதிலும் பிறமொழிச் சொற்களை ஒலிபெயர்த்து எழுதுவதிலும் மனம்போன போக்கைக் கடைப்பிடிக்கிறோம் கலைச் சொற்களை உருவாக்குவதிலும் பயன்படுத்துவதிலும் நாம் திட்டமிட்டுச் செயற்படுவதே கிடையாது. ஒரேவகையான குறுக்க விளக்கங்களையும் குறியீட்டு முறையையும் பின்பற்றுவதில்லை. சொற்களைச் சேர்ப்பதிலும் பிரிப்பதிலும் ஒரே முறையைக் கையாள்வதில்லை. சில எழுத்துக்களுக்கு இரு வரிவடிவங்களைக் கூடப் பயன்படுத்துகிறோம். டாக்டர் பட்டக் கட்டுரை எழுதுவதில் கூட முறையியலை மேற்கொள்வதில்லை. மேல்மட்ட நிலையிலுங்கூட எந்த வித நூல் நடையையும் (Style Sheet) பின்பற்றாமல் மனம் போன போக்கில் கட்டுரை எழுதும் முறை மேற்கொள்ளப்படுகிறது. மாணவர்கள், ஆசிரியர்கள், அச்சுப் பிரதி திருத்துபவர்கள், தட்டெழுத்தாளர்கள், பத்திரிக்கை ஆசிரியர்கள், வெளியீட்டாளர்கள் ஆகிய அனைவரும் ஒத்துழைத்தால் தமிழில் ஒருவகைச் சீர் நிலையை (Uniformity) விரைந்து கொண்டு வந்துவிடலாம். இந்தச் சீர்நிலையை ஆரம்பப் பள்ளி முதலே முறையாகச் செயல்படுத்தி முரண்பாடுகளைத் தவிர்த்தால் ஒழுங்குமுறை, ஓரியல் போக்கு என்ற எல்லாமே தமிழுக்கு உரியதாகிவிடும். தமிழ் தெரியாத பிறமொழியாளர்களுக்குத் தமிழை எளிமைப் படுத்துவதற்காக இவற்றைச்செய்வதாக நாம் கருதிவிடக் கூடாது. வளரும் கலைகளுக்கும் அறிவியல் துறைகளுக்கும் ஏற்ப நமதுமொழியைத் தரப்படுத்துவதாகும். இப்பணிகளை நெடுங்காலம் புறக்கணிப்பது தமிழியலின் வளர்ச்சியைத் தடைப்படுத்துவதாகவே முடியும்.

## வேண்டுகோள்

பன்னிரண்டு ஆண்டுகளாகப் பிறமொழியாளர்களுக்குத் தமிழைப் பயிற்றுவிக்கும் அனுபவத்திலிருந்தும் தமிழ் பயிலும் வெளிநாட்டு மாணவர்களின் முறையீடுகளிலிருந்தும் தமிழைப் பயிற்றுவிக்கும் பிறமொழி பேராசிரியர்களிடம் உரையாடியதிலிருந்தும் உருவான கருத்துக்களில் சிலவற்றை மட்டும் பொது நிலையில் இங்கே குறிப்பிட்டுள்ளேன். இந்தக் கருத்துக்களிலுள்ள நியாயப் போக்கை உணர்ந்துகொண்டு குறைபாடுகளைக் கண்டறிந்து அவற்றை விரைந்து களைவதற்குரிய நல்ல திட்டங்களை மேற்கொள்ளவேண்டியது தமிழறிஞர்களின் தலையாய பணிகள் மட்டுமல்ல; தலைமுறைக் கடமைகளுமாகும். கடல்கடந்த நாடுகளில் தமிழியலை வளர்க்க விழையும் ஒவ்வொரு தமிழ் மகனும், ஒவ்வொரு கல்விக் கழகமும் ஒவ்வொரு தமிழ் இயக்கமும், இந்த வேண்டுகோளை ஏற்றுக்கொள்ளும் என்ற திட நம்பிக்கை எனக்கு உண்டு.

சிறுகதை

# துணையிலேன்

ஆர். சூடாமணி

கண்களல்ல, கணத்துக்குக் கணம் விரிந்து கொண்டே போகும் இரண்டு நெருப்புக் கோளங்கள். உடல் அல்ல, உயர்ந்து எழும்பி நடுங்கும் ஒரு தீக்கொழுந்து.

அவள் குமுறினாள்.

இவர் வரட்டும் அந்தத் தடிப்பயல் வாலை ஒட்ட நறுக்கி வைக்கிறேன்.

வாசலுக்கும் உள்ளுக்குமாய்ப் பாதங்கள் பரபரத்தன.

இன்றைக்கென்று இவர் தாமதமா? இல்லை, என் மன ஓட்டத்துக்கு ஈடுகொடுக்க முடியாமல் நேரம்தான் களைத்து உட்கார்ந்து விட்டதா?

சீக்கிரம் வாருங்களேன். உடனே வாருங்களேன். அந்தக் கடங்காரன் என்ன செய்திருக்கிறான் தெரியுமா?

பொங்கிப் பொங்கிக் குமுறினாள்.

'இக்கணம் நான் காலாக்கினியாகி உலகத்தையே அழிக்கமுடியும். ஆயிரமாயிரம் கண்ணகிகள் என்னுள் அடங்கும்.'

''அம்மா! அம்மா! என் கைல என்ன வச்சிருக்கேன் பாத்தியா?''

இரண்டரை வயதுக் குழந்தை ரமேஷ் தன் பொம்மை ரயிலை அவளிடம் கொண்டு வந்து நீட்டிக் கண்களை விரித்தான். அந்த் பொம்மையை அவனுக்கு வாங்கிக் கொடுத்து இரண்டு மாதங்களாகிவிட்டன. அன்றுமுதல் தினம் அதை வைத்துக்கொண்டுதான் விளையாட்டு. தினமும் அதை ஒரு புதுப் பொருளாகக் கண்டு கண்களை விரிக்கும் மாறாத ஆவல். குழந்தை பருவம் ஒரு தீயாகவும் வியப்பு என்பது அன்றாடம் அதில் குளித்து மீண்டும் மீண்டும் புத்துயிர் பெற்று எழுகிற ஒரு பொருள் போலவும் தோன்றிற்று.

''பாத்தியாம்மா என் ரெயிலே?''

''நல்லாயிருக்குடா கண்ணு, அப்படிப் போய் விளையாடு.''

'இவரை என்ன இன்னும் காணேம்?'

பீரோவின் மேல், கண்ணுடிப் பதுமையின் கனத்துக்குக் கீழே, அந்தக் கடிதம். எங்கோ இருந்த அது, அவள் அதனருகில் இல்லாதபோதும், அந்த அறையிலிருந்தே வெளியேறினுலும், அவளுக்குள் மாருத சுமையாய் அழுத்திக் கொண்டிருந்தது கேவலம் காகிதத்துக்கு இப்படி ஒரு கனமா?

'டே சோதாப்பயலே, கொஞ்சம் பொறுடா! ஒரு அணுகுண்டு வருகிறது உன் தலைமேல் விழ, பார்த்துக் கொண்டே இரு, கடிதமா எழுதுகிருய், கடிதம்? அதுவும் கல்யாணமான ஒருத்திக்கு? உடம்பா தினவெடுக்கிறது? இரு இரு, செம்மையாய் உதை வாங்கினல் தினவெல்லாம் தீர்ந்துவிடும். எனக்காக வரிந்து கட்டிக் கொண்டு சண்டைக்கு வர யாருமில்லையென்று நினைக்கிருய்?

என்னை என்னவென்று நினைத்து விட்டான்! இப்படி ஒருவன் எழுதும்படி நான் என்ருவது நடந்து கொண்டதுண்டா? தெருவில் இறங்கினல் போர்த்திய முதுகைத் திறந்ததுண்டா? கறிகாய் வாங்க மார்க்கெட்டுக்குப் போகமுடியாதா ஒரு கௌரவமான பெண் இந்த நாளில்?

அவன் நாசமாய்ப் போவான், உருப்படாமல் போவான். என்கோபமும் குமுறலும் அவனைச் சும்மா விடாது. 'அடே, நீ அழிந்துதாண்டா போவாய்!'

எனக்கு இப்படி ஒருவன் எழுத ஆயிற்ரு!'

'சீக்கிரம் வாருங்களேன், எனக்கு நேர்ந்த அவமானத்தைக் கேளுங்களேன்.'

எனக்கா இந்தச் சிறுமை! உடம்பு கூசுகிறதே!

''அம்மா........''

''ரமேஷ் கண்ணு, கொஞ்சநேரம் அம்மாவைத் தொந்தரவு செய்யாம நீயாய் விளையாடிக்கிட்டுருடா கண்ணு!''

வாசலில் ஸ்கூட்டர் வந்து நின்றது. வனஜா வாசல் பக்கம் தாவிக்கொண்டு சென்ருள்.

''என்னங்க, இந்த அக்கிரமத்தைக் கேட்டீங்களா?'' என்ருள் பதற்றத்துடன்.

முத்து ''ஸ்...... அப்பாடா'' என்றுபெருமூச்சு விட்டவனுய் உள்ளே வந்தான். வனஜா அவனைத் தொடர்ந்து வந்தாள்.

'நான் கறிகாய் மார்க்கெட்டுக்குள் போறபோது சிலசமயம் ஒரு ரௌடி பின்னுலேயே வருவான். முறைச்சு முறைச்சுப் பார்ப்பான் அப்படின்னெல்லாம் சொல்லியிருக்கேன் பாருங்க?.........''

''ஹலோ ரமேஷ் கண்ணு!''

முத்து, குழந்தையை அள்ளி ஒருதரம் மேலே தூக்கிப் போட்டுப் பிடித்துவிட்டு அணைத்துக் கொண்டான் ரமேஷ் கலகலவென்று சிரித்தான். ''இன்ெனுரு வாட்டிப்பா!'' என்ருன் கொஞ்சலாக. தந்தை அவனை மீண்டும் தூக்கிப் போட்டுப் பிடித்தான்.

''இதைக் கேளுங்கங்றேனே! அவன் வந்து...... இன்னிக்கு ......' வனஜாவால் பேச முடியாமல் துக்கம் குமுறிக்கொண்டு வந்தது. முகம் கோபமும் அவமானமும் கொண்டு சிவந்திருந்தது. 'இன்னிக்கு அவன் என்ன செஞ்சான் தெரியுங்களா?...''

''நான் போய் டிரெஸ் மாத்திகிட்டு வரேன்'' என்று முத்து குழந்தையைக் கீழே இறக்கி விட்டுத் தன் அறைக்குக் சென்ருன்.

வனஜா உடம்பெல்லாம் நடுங்க நின்று கொண்டிருந்தாள். அவருக்கு இப்போது என்ன அவசரம் டிரஸ்மாற்ற? எவ்வளவு பெரிய விஷயம் இருக்கிறது அவர் காதில் போட?

முத்து, சராயை மாற்றிவிட்டு வேட்டி அணிந்தவனாய்த் திரும்பி வந்தான்.

''அந்த ராஸ்கல் இன்னிக்கு என்ன செஞ்சான்னு கேளுங்களேன் முதல்ல......''

''எந்த ராஸ்கல் இந்தச் சுட்டிப் பயலையா சொல்றே? என்றபடி முத்து குழந்தையைத் தூக்கிக் கொண்டு நாற்காலியில் உட்கார்ந்தான்.

''என்ன நீங்க! குழந்தையை யார் சொன்னாங்க இப்போ? நான் கறிகாய் வாங்கி வரப் போற போது ஒரு சோதாப் பயல் தொடர்ந்து வந்து தொந்தரவு கொடுப்பான்னு சொல்லியிருக்கேனில்ல? அவன் தான் இன்னிக்கி......''

'என்ன செஞ்சான்? கையைக் கிய்யைப் பிடிச்சு இழுத்துட்டானா?''

''அப்படிச் செஞ்சிருந்தால் மார்க்கெட் கூட்டத்தில் யாரேனும் நல்லவங்க நாலு பேர் அவனைப் பிடிச்சு உதைச்சிருப்பாங்க, விஷயம் அதோடு முடிஞ்சுபோயிருக்கும். அவன் வந்து .........''

''அப்படி ஒண்ணும் ஆகலையே? பின்னே என்ன? உள்ளே போய் எனக்குக் காப்பி எடுத்துட்டு வா. ரமேஷ் கண்ணா, உனக்கு நான் என்ன வாங்கிட்டு வந்திருக்கேன் சொல்லு பார்க்கலாம்? மிட்டாயா சாக்லெட்டா?''

''என்னங்க இது? நான் சொல்றதைக் காதில் போட்டுக்காம நீங்க பாட்டுக்கு...'' அவளுக்குத் தொண்டையை அடைத்தது.

''ஆபீஸ்லேயிருந்து வந்தவனை முகம் பார்த்துக் கவனிச்சு காப்பி கொடுத்து உபசாரம் பண்ணுவோம்னு இல்லாம வீட்டுக்குள் நுழைஞ்சதும் நுழையாததுமாய்த் தொண தொணக்கிறியா?''

''இதுதான் தொணதொணப்பா! நான் எத்தனைப் பெரிய விஷயம் சொல்றேன்! நீங்க எப்ப வருவீங்க, எல்லாத்தையும் எப்ப உங்களண்ட கொட்டலாம்னு துடிச்சிக்கிட்டிருந்தேன்.........''

நான்தான் வந்துட்டேனில்ல? அப்புறம் நிதானமாய்ச் சொல்லேன். இப்போ போய் எனக்குக் காப்பி கொண்டுவா, போ.''

உங்களுக்கு என் மனசு புரியலையா? எப்படி இந்த மாதிரி பேச முடியுது? முதல்ல நான் சொல்றதைக் கொஞ்சம் காதில் வாங்கிக்குங்க.........''

இப்போ எனக்குக் காப்பி கொண்டு வரப் போறியா இல்லையா? குழந்தையிடமிருந்து முகத்தைத் திருப்பி அவளைப்பார்த்துச் சற்றுக் கோபமான குரலில் அவன் பேசினான்.

வனஜா அடி உதட்டைக் கடித்துக் கொண்டாள். ஒரு முறை கணவனை ஏறிட்டுப் பார்த்துவிட்டு உள்ளே போனாள்.

முத்து குழந்தையோடு கொஞ்சி விளையாடினான். குழந்தையும் தந்தையோடு இருப்பதில் மகிழ்ச்சி கொண்டு துள்ளிக் குதித்து விஷமம் செய்தான்.

வனஜா சூடான காப்பியை இரு தம்ளர்களில் பகிர்ந்து எடுத்து வந்து அவன் பக்கத்தில் ஒருமுக்காலி மேல் வைத்தாள்.

''இப்போ கேளுங்களேன். அந்தத்தடியன் இன்னிக்கு நான் காய்கறி வாங்கிக் கிட்டிருந்தப்ப......''

''காப்பியில் புகை நாத்தம் அடிக்குதே. காஸ் வராததால் கரிஅடுப்பில் செய்யறதில் இதுமாதிரி ஆய்ப்போகுதா? பாலை ஸ்டவ்வில் காய்ச்சியிருக்கக் கூடாது?''

''நான் கறிகாய் வாங்குற மும்முரத்தில் இருந்தப்ப, கையில் மாட்டியிருந்த ப்ளாஸ்டிக் கூடையில் மார்க்கெட்டு நெரிசலில் யாரும் கவனிக்காம ஒரு சீட்டு எழுதிப்போட்டிருக்கான். நான் ஒரு முண்டம். அதைப் பார்க்

காமலேயே காயெல்லாம் வாங்கி அது மேலே போட்டுக்கிட்டிருந்திருக்கேன் போலிருக்கு. வீட்டுக்கு வந்துகூடையைத் தரையில் கவுக்கறேன், கடைசியா ஒரு துண்டுக் காகிதம் விழுது என்னடா இதுன்னு பிரிச்சிப் படிச்சால்...'' அவளுக்கு அழுகை குமுறிக்கொண்டு வந்தது. அவன் மார்பில் புதைந்து கொள்ள வேண்டும் எல்லாவற்றையும் கொட்டித் தீர்க்கவேண்டும் என்று உடலும் மனமும் பதறின. ''ரொம்ப அசிங்கமாய் ஒரு லெட்டர் எழுதியிருக்கானுங்க! இப்படிச்செய்யலாமா? இவங்களுக்கும் தாய் இல்லையா, அக்கா தங்கச்சிங்க இல்லையா? எனக்குத் தாங்க முடியலேங்க. நீங்களே பாருங்க இந்த அநியாயத்தை...'' அவள் அந்தத் துண்டு கடிதத்தை எடுக்க பீரோவின் அருகில் சென்றாள்.

''இன்னொரு வாட்டி இந்த மாதிரி மோசமான காப்பி கொடுத்தாயானால் எனக்குக் கெட்ட கோவம் வரும் வனஜா.''

''எனக்கு இன்னிக்குக் காலையில் இந்தக் காகிதத்தைப் பார்த்ததிலேருந்து மனசே சரியாயில்லீங்க. அதான் பாலை அடுப்பில் வச்சிட்டு நேரத்தோடு இறக்க மறந்துபோய்ட்டேன். இதுவரைக்கும் ஒருநாளும் காப்பி இப்படி ஆயிருக்குதா? இந்த அக்கிரமத்தைப் பாருங்களேன்...'' அவள் அந்தக் காகிதத்தை எடுத்து வந்து அவனிடம் நீட்டினாள்.

''இருஇரு மனுஷன் காப்பியைக் குடிக்கறத்துக்குள் அத்தனை அவசரமா? ரமேஷ் கண்ணு, நீ பால் குடிச்சிட்டியா?''

''ம்''.

''கொஞ்சம் காப்பி வேணுமா?''

''ம், வேணும்!'' ரமேஷின் கண்கள் விரிந்து பிரகாசித்தன. முத்து ஒரு தம்ளரில் சிறிது காப்பியை ஊற்றி மகனைக் குடிப்பித்தான். பிறகு தானும் அருந்தினான்.

வனஜா படபடப்போடு, இதைப் படியுங்களேன்'' என்றாள். உதடுகள் துடித்துக் கொண்டிருந்தன.

முத்து தம்ளர்களை மேஜைமேல் வைத்தான். கைக்குட்டையை எடுத்து வாயையும் முகத்தையும் துடைத்துக்கொண்டான். ரொம்ப புழுக்கமாயுருக்குது. ஃபானை இன்னும் கொஞ்சம் வேகமாய் விடேன்'' என்றான்.

''முதல்லே இந்தக் காகிதத்தைப் பிரிச்சுப்படியுங்களேன்''

''சரியான பிடிவாதக்காரிதான் நீ.'' அவன் கடிதத்தை வாங்கிக் கொண்டான். ''ம், இப்பவானும் ஃபேனை வேகமாய்விடு.

இயந்திரம் போல் அதைச் செய்து விட்டுத் திரும்பி வந்து அவன் முன்னே நின்றாள் வனஜா. நான்காக மடித்திருந்த காகிதத்தைப் பிரித்து அவன் அதைப் படித்த போதெல்லாம் இதயம் தெறிக்க அப்படியே அவனைப்பார்த்த வபாறு நின்றாள். மூச்சி வேகமாய் வந்தது. சிவந்த கண்களில் நீர் முட்டி நின்றது.

அந்த ரௌடி, தான் அவளை அடிக்கடி மார்க்கெட்டில் பின் தொடர்ந்து வந்ததையும் பார்த்துக் கொண்டு நின்றதையும் அவள் கவனித்திருப்பாளென்றும், அதனால் கடிதம் எழுதியிருப்பது யார் என்பது அவளுக்குப் புரிந்திருக்குமென்றும், அவளது அழகைக் கண்டு அவள் மீது அவன் காதல் கரைமீறிப் பாய்கிறதென்றும், அடுத்த முறை அவள் கறிகாய் வாங்க வரும் போது அவனைப் பார்த்து தலையை அசைத்து ஒரு புன்னகை செய்தால் அவளுடைய நல்ல பதிலை அவன் தெரிந்து கொள்வானென்றும் எழுதியிருந்ததை எண்ணிப் பார்க்கையில் அவளுள் ஆத்திரமும் அவமானமும் பின்னும் அதிகமாயின.

அவன் படித்து முடித்துவிட்டுக் காகிதத்தை மீண்டும் நான்காய் மடித்தான். அவள் ஒரு பூகம்பம் நிகழ்வதை எதிர்பார்த்துக் காத்திருந்தாள். இப்போது அவன் சீற்றம் மிகுந்து எழுந்து நிற்பானல்லவா? 'என் மனைவிகிட்ட இப்படி விஷமம் செய்யறவனை விட்டேனா பார்!' என்று முழங்குவானல்ல

வா? ''வனஜ்!'' என்று அன்பாக அழைத்துக்கண்ணைத் துடைத்து 'அவனை எனக்கு அடையாளம் காட்டு, போதும். பயலை உண்டு இல்லேன்னு ஆக்கிடறேன், நீ வருத்தப்படாதே'' என்று அவளைத் தேற்றுவானல்லவா?

''ம், இந்தாபிடி.''

அவன் நீட்டிய அக் கடிதத்தை வாங்கி அவள் கைக்குள் கசக்கியபடியே,'' பார்த்தீங்களா அவன் செஞ்சிருக்கிறதை? என்ன கயவாளித்தனம்! ஒரு பொம்புளையைப் பார்த்தால் உடனே எதை வேணும்னுலு கிறுக்கிடறதா?'' என்றுள் கண்களில் அனல் வீச.

''உலகத்தில் பலபேர் பலவிதமாய் இருப்பாங்க. பொம்புளேங்க வெளியே போனுல் இதுக்கெல்லாம் தயாராயிருக்க வேண்டியதுதான்'' என்றுன் முத்து.

வனஜா அவனை அதிர்ச்சியோடு பார்த்தாள்.

என்னங்க இவ்வளவு நிதானமாச் சொல்றீங்க! அவன் பண்ணினது எத்தனைப்பெரிய அக்கிரமம்! அதுவும், என் கால் மெட்டியைப் பார்த்திருப்பானில்ல? நான் கல்யாணமானவள்னு தெரிஞ்சிருக்குமில்ல? அதுக்கப்புறமும் இப்படின்னு.........''

''தொலையுது விடு. இதையெல்லாம் கண்டுக்கவே கூடாது.''

''அப்படின்னு அவன் செஞ்சது தப்பில்லேன்னு சொல்றீங்களா?''

''தப்புதான்.''

''அப்போ கண்டிச்சு வைக்க வேணுமா?''

''எப்படி கண்டிக்கிறது? நீ அவன் கிட்ட டேய் 'இந்த மாதிரியெல்லாம் செய்யாதே. நல்லால்லே'ன்னு சொன்னுல் அடங்கிடுவானு?''

நான் எதுக்குங்க கண்ட பயலோடெல்லாம் பேசணும்? அவ்வளவுக்கு கதியத்துப் போய்ட்டேனு? நீங்கதான் அவனைக் கண்டிச்சு, தேவையானு ஒரு அறை கூட விடணும் அவனுக்கு.''

''நானு?'' முத்து புருவங்களை உயர்த்தினுன். அவள் ஏதோ அன்னிய மொழி பேசியதுபோல் அவனுக்குத் தோன்றியிருக்க வேண்டும்.

''ஆமா, வேற யாரு? நீங்கதான் என் புருஷன். என்கிட்ட வாலாட்டறவங்களை நீங்கதான் ஒரு தட்டுதட்டி வைக்கணும். நாளைக்கு மார்க்கெட்டுக்கு வாங்க என் கூட ''

''ரொம்ப நல்லாயிருக்கே! வீண் வம்பை விலைக்கு வாங்கச் சொல்றியா? நீ இனிமே கொஞ்சம் உஷாராயிரு. அவ்வளவுதான்.''

''அப்படின்னு?'' அவள் குரல்சட்டென்று கூர்மையாகிறது. ''நான்தான் அவன் இந்த மாதிரி பழகிக்கருப்பல நடந்துக்கறேன்னு சொல்றீங்களா?

''அப்படியில்லே, இப்போ இருக்கிறதை விட இன்னும் கொஞ்சம் ஜாக்கிரதையாயிரு அப்படிங்கறேன்.''

''அப்பாடி இனிமே தினம் நீங்களே மார்க்கெட்டுக்குப் போய்க் கறிகாய் வாங்கிக்கிட்டு வாங்க.''

வேற வேலையில்லையா எனக்கு? உனக்கு ஒழுங்கா வெளியே போய்வர துப்பில்லாட்டி அதுக்கு நான்தான் பொணையா?

அவளால் கணநேரம் பேச முடியவில்லை. சொற்களுக்கு அப்பாற்பட்ட உணர்ச்சிக் குமுறலுடன் கணவனைப் பார்த்துக்கொண்டு நின்றபோது மூச்சு இரைத்தது. வலது கைப்பிடியில் அந்தக் கடிதம் கசங்கிக் கூழாகியிருந்தது உள்ளங்கை வேர்வையில் நீல மசி கலந்து எழுத்துக்கள் வால்கொண்டு நீண்டி

ருந்தன. கைச்சதையில் நீலக்கறை படிந் திருந்தன.

''அப்போ...... அப்போ......'' அவள் கஷ்டப்பட்டுப் பேசினுள். நீங்க நாளேக்கு என்கூட மார்க்கெட்டுக்கு வரமாட்டீங்களா? அவனேப் பார்த்துக் கண்டிச்சி ஒரு வார்த்தை பேசமாட்டீங்களா?'' திடீரென்று அவள் குரல் யாசித்தது. ''நீங்க அத்தனே கூட்டத்தில் அவனே 'உன் கைவரிசையெல்லாம் இங்கே காட்டாதேடா நாயே, இன்னெரு வாட்டி என் பெண்ஜாதிக்கிட்ட வம்பு பண்ணினியா ஞல் செருப்பால அடிப்பேன்' அப்படின்னு ஒரு வார்த்தை சொன்னுல் அடங்கிடு வானுங்க!''

''கண்ட பயலேர்ட வந்து பேசி என்னேத் தாழ்த்திக்கச் சொல்றியா? 'ஐ வோண்ட். டிமீன் மைஸெல்ஃப்.''

வனஜா அதிர்ந்து போய் நின்ருள். 'என்னேத் தாழ்த்திக்கொள்ள மாட்டேன்'! அப்படியானுல் அவளேப் பற்றி பரவாயில் லேயா? அவள் அவமானத்தாலும் சீற்றத் தாலும் எப்படி துடித்துக்கொண்டிருக்கிருள் என்பதை அவன் உணரவே இல்லேயா? அவளே அணேத்து அவள் புண்ணேத் துடைக் கும் வகையில் அனுதாபத்துடன் ஆறுதலாக ஒரு சொல் கூறித்தேற்றுவதைவிட அவனது சுயகௌரவம்தான் பெரிதாய்ப் போய்விட் டதா? எவனே ஒரு சோதா கண்டபடி எழுதி அவளுடைய மான உணர்ச்சிக்கு அடி கொடுத்திருக்கிருனே, அதற்கு ஒரு கண் டனம் கிடையாதா? அவனுடைய கௌரவம் மட்டும்தான் முக்கியமா? இதுபோன்ற ஒரு சந்தர்ப்பத்தில், அவள் கொதித்துக் குமறிக் கொண்டிருக்கையில், அவனுல் தன் சுயகௌ ரவத்தை மட்டும்தான் நினேக்கமுடிகிறதா?'ஐ வோண்ட் டிமீன் மைஸெல்ப்.'

இதுதானு தாம்பத்தியம்? இவ்வளவு தானு இணேவாழ்வின் அர்த்தம்?

காப்பி டம்ளர்களே உள்ளே எடுத் துட்டுப் போ. ராத்திரிக்கு என்ன சமையல் செய்யப்போறே? என்ருன், முத்து.

வனஜாவால் பேசமுடியவில்லே. ரோசம் குரல்வளேயைப் பற்றியது. சிரமத்துடன், ''அப்போ...... அப்போ இந்தக் காகிதம்?'' என்ருள்.

''கிழிச்சுக் குப்பைத் தொட்டியில போடு. இதுமாதிரி காகிதங்களுக்கெல்லாம் அவ்வளவு தான் மதிப்பு ''

''அவன் திரும்பத் திரும்ப இந்த மாதிரி ஏதானும் பண்ணினுல்?''

''நீ ஜாக்கிரதையாயிருந்தா பண்ண மாட்டான்.''

''நான் ஜாக்கிரதையாயிருக்கிறதுன்னு?''

''ஒரு சின்ன விஷயத்தை ஆனுலும் நீ ரொம்ப பெரிசு பண்ணறே.''

என் உடம்பெல்லாம் அவமானத்தால் தகிக்குதே. இது உங்களுக்குச் சின்ன விஷயமா?

''போய்ப் பச்சைத் தண்ணியில குளிச் சிட்டு வேலேங்களேத் கவனி. இந்த விஷயம் மறந்து போயிடும்.''

அவன் மறுபடியும் குழந்தையை மடி யில் எடுத்து வைத்துக் கொண்டு விளேயாட ஆரம்பித்தான். வனஜாவின் உதடுகள் நடுங் கின. ஒரு நிமிஷம் அவனேப் பார்த்திருந்து விட்டு உள்ளே போனுள். கையில் இருந்த கசங்கிய காகிதத்தை வெறித்துப் பார்த்தாள். பிறகு ஆத்திரமாய் ஒரு தீக்குச்சியை உரசிக் காகிதத்தைக் கொளுத்திக் கருக்கல்களேப் பெருக்கிக் குப்பைக் கூடையில் போட்டாள் வலது கையை நன்ருக சோப் போட்டுக் கழுவிக்கொண்டாள். இருப்பினும் அந்தக் கடிதத்தின் ஆபாசம் இன்னும் ஒட்டிக் கொண்டிருப்பதுபோலவே இருந்தது.

இதய படபடப்புச் சிறிதும் குறைய வில்லே.

என்னேவிட அவருக்குத் தன் கௌரவம் தான் பெரியது.

முகம் இன்னமும் ரத்தமாய்க் குழம்பி யிருந்தது.

என்னை விட்டுக் கொடுத்து விட்டார். 'ஹி ஹாஸ் லெட்மி டௌன்

இயந்திரம் போல் சமையலைச் செய்து முடித்தாள்.

சாதாரணமாக இந்த வேளையில் வேலை களை முடித்தபின் காற்றுட வாசல் வராந்தா வில் வந்து உட்காருவது வழக்கம். இப்போது அங்கு முத்து இருந்ததைக் கவனித்தபோது அவனோடு உட்கார மனமின்றி அறைக்குள் ளேயே உட்கார்ந்தாள். விளக்கை ஏற்றிக் கொள்ளவும் தோன்றாமல் இருளிலேயே இருந்தாள்.

என்னை யார் எது வேண்டுமானாலும் சொல்லலாம். தட்டிக்கேட்க ஆளில்லை.

''இந்தா வனஜா. இந்த டிராஃப்டைக் கொண்டுபோய் பீரோவில் வை. என் நண் பன் ஒருத்தன் ஒரு விஷயமாய் ஆபீஸ் அட்ரஸுக்கு எனக்கு அனுப்பினான். முக்கி யமான கவர் ஜாக்கிரதையாய்க் கொண்டு போய் வை. நான் தட்டுக்கெட்டு எங்கேயா னும் வைச்சுடுவேன். அப்புறம், போனவாரம் எலெக்ட்ரிக் பில் வந்துதில்லே? எடுத்து வச் சிருப்பாயே? அதைக் கொண்டா. ஒரு செக் எழுதி ராத்திரியே கவரில் போட்டு உன்னண் டை கொடுத்துடறேன். நாளைக்கு போஸ்ட் பண்ணிடு.

இதற்கெல்லாம் — வீட்டைக் கவனிக் கவும் வீட்டின் சில்லறை அலுவல்களைக் கவனிக்கவும் கணவனையும் குழந்தையும் கவனிக்கவும் நான். எனக்காக அவர் தரப் பிலோ?... என்னிடம் ஒருவன் இப்படி நடந்து கொள்ள ஆயிற்று என்று அவர் ரத்தம் கொதிக்கவில்லையே!

என்ன, இருட்டிலே உட்கார்ந்துகிட்டு தியானம் பண்ணறியா? பதிலேயே காணோமே?''

முத்து கையில் குழந்தையுடன் உள்ளே வந்து அறையில் விளக்கைப் போட்டான். குழல் விளக்கின் திடீர்ப் பிரகாசத்தில் அவள் கண்கள் ஒருநொடி கூசி நிலைப்பட்டன.

''என்ன பேசாம இங்கே உட்காந்தி ருக்கே வனஜா? வாசலுக்கு வரல்லையா? இந்தா பிடி, என் சிநேகிதனோட கவர் இதைக் கொண்டுபோய் வச்சிட்டு எலெக்ட்ரிக் பில்லை எடுத்துட்டு வா.''

அவள் அசையாமல் உட்கார்ந்திருந் தாள். அவன் பக்கமே திரும்பவில்லை.

''என்ன 'ஸல்க்' அடிக்கிறே? அந்த மார்க்கெட் ஆளு விஷயத்தையே இன்னும் நினைச்சிட்டிருக்கியா? இந்த அற்ப விஷ யத்தைப் போய்ப் பெரிசு பண்ணாதேன்னு நான் சொல்லலே? அவனை நான் போய்த் திட்டி மிரட்டணும்னு சொல்றியே, உனக்கு ஏதானும் அறிவு இருக்குதா? அவன் லெவ லுக்கு நான் இறங்க முடியுமா?

நான்... நான்... நான்! அவள் ஒரு பொருட்டே இல்லை. அவன் வந்து அந்த ஆளைக் கண்டித்து மிரட்ட வேண்டுமென்று அவள் நினைப்பதை மிகை என்றே அவன் ஒருகால் கருதினால் கூட ''அசடே, இனிமே நீ இதைப்பத்திக் கவலைப் படாதே. என்கிட்ட சொல்லிட்டேயில்ல? இனிமே நான் கவனிச் சுக்கறேன். விஷயத்தை என்கையில் விட்டுடு. இவனோடு இப்போ பேசப்போனால் அசிங்க மாயிடும். ஆனால் மேற்கொண்டு அவன் ஏதாவது தப்பாய் நடந்துக்கப் பார்த்தால் அப்போ நான் அவனைச் சும்மா விடமாட் டேன். உன்மான அவமானம் எனக்கு முக் கியம் இல்லையா? இது அதிகப்படியாய்ப் போக நான் விடுவேனா? என்கிற ரீதியிலாவது பேசி அவளை ஆறுதலுறுத்தியிருக்கக்கூடாதா? அவளுக்கு எத்தகைய பாதுகாப்புணர்ச்சி கிடைத்திருக்கும்! அவளால் தன்னைக் காப் பாற்றிகொள்ள முடியாதா என்பது வேறு விஷயம். அவனிடமிருந்து அதுபோன்ற அரவணைப்பு வந்திருந்தால் அந்தத் தெம்பும் நம்பிக்கையும் இதமும் எப்படியிருக்கும்! 'நான் அவருக்கு அருமையானவள்' என்ற எண்ணத்திலேயே நாலுமடங்கு வலிமை

வந்துவிடுமே! அப்படி அரணுக நிற்கும் கணவனுக்காக அவள் என்னதான் செய்ய மாட்டாள்! இப்போதோ? 'அவன் லெவலுக்கு நான் இறங்க முடியுமா'? நான் என்னைத் தாழ்த்திக் கொள்ளமாட்டேன்.

அவளுடைய அடிவயிற்றிலிருந்து ஒரு நெருப்புப் பந்து உருண்டு கொண்டுவந்தது. கண்களில் நீர் மின்னியது.

எதுக்கு இப்போ அழுது ஆகாத்தியம் செய்யறே? எவனே ஒரு காலிப்பயல் காகிதம் எழுதிட்டா குடியா முழுகிப்போயிடும்? இந்த மார்க்கெட்டை விட்டுட்டுக் கொஞ்சம் தொலை வில் இருக்கிற வேறேதாவது மார்க் கெட்டுக்குப் போய்க் காய்கறி வாங்கேன்! அப்பப்பா, இந்தப் பொம்பளைங்களுக்கே நெத்தியில கண்ணீர்.''

அவள் அசையவே இல்லை.

''சரியான கல்லுளி மங்கன். நீ இப் போ எழுந்து போய் அந்த எலெக்ட்ரிக் பில்லைக் கொண்டுவரப் போறியா இல்லையா? பத்திரமாய் வச்சிருக்கேயில்ல? அப்படியே போன மாசம் நான் ஆஸ்பத்திரில் படுத்தி ருந்தப்ப ஆன செலவின் பில்களையும் ஜாக்கிர தையாய் வச்சிரு. 'ரிஇம்பர்ஸ் மென்ட்'டுக்கு அதையெல்லாம் காட்டணும்.''

நான் ஒரு மனைவியல்ல. வாழ்வோடு இணைந்தவளல்ல. நான் ஒரு ஹவுஸ்கீப்பர். அவ்வளவுதான்.

''என்ன பேசாமலேயே இருக்கே வனஜா?''

திடீரென்று தன்னை ஓர் அநாதை போல் அவள் உணர்ந்தபோது, கண்களில் மின்னி யிருந்த நீர் நிறைந்து தளும்பி இரு சொட்டுக்கள் கன்னங்கள் மீது விழுந்து விட்டன.

''அம்மா!'' ரமேஷ் வியப்பில் கூவினன். அவன்தான் சின்னக் குழந்தை. அழுவான் பெரியவர்கள் கூடவா அழுவார்கள்? அதுவும் அம்மா!

''அம்மா!'' தந்தையின் கரங்களிலிருந்து பிய்த்துக்கொண்டு இறங்கி அவளிடம் ஓடி வந்தான் ரமேஷ். தளிர்விரல்களால் அவள் கன்னத்தைத் தொட்டான்.

''ஏம்மா அழறே? அம்மாவெல்லாம்கூட அழுவாங்களா என்ன? ஐயையே. ஷேம் ஷேம்! உன்னை யாரும்மா அடிச்சாங்க? நான் இப்பவே போய் அவங்கூட சண்டை போட்டு அடிச்சித் தள்ளிட்டு வந்துடறேன் நீ அழாதேம்மா!'' என்றவாறு அவள் கண் களை இரு கைகளாலும் துடைத்தான்.

வனஜாவால் அதற்குமேல் தாங்க முடிய வில்லை. குழந்தையைத் தூக்கி இடது கை யால் அணைத்துக் கொண்டாள். வலது கை மேஜைமீது ஓங்கி ஓங்கிக் குத்தியது: கண்களிலிருந்து நீர் தாரையாய்ப் பெருக லாயிற்று.





# மன்னன் மடல்

**மன்னர் மன்னன்**

*புரட்சிக்கவி*

பாரதிதாசன் மகனார்

இங்கிலாந்தில் வதியும் செந்தமிழ் இளைஞனே !

நான் எழுதும் இந்த மடல் உனது சிந்தனையைக் கிளறிச் செயல் வீரனாக்காதா என்ற ஏக்கம் இந்த எழுத்து வடிவத்தைப் பெறுகின்றது. ஆக்சுபோர்டு நகரின் வால்டன் தெருவிலே செப்பல்கர் இடுகாட்டிற்கு உன்னை நான் இப்போது இட்டுச் செல்கிறேன். வா !

ஏறத்தாழ மூவாயிரம் கல்லறைகள் இங்கே உள்ளன. அவற்றில் ஒன்று செந்தமிழின்பால் மாறாத காதல் கொண்டிருந்த ஜி. யு. போப் பெருமகனாருடையது.

இதற்கு முன் இந்தக் கல்லறையை நீ பார்த்திருக்கிறாயா ?

இடமின்மை காரணமாகப் பல்லாண்டுகட்கு முன்பே இக்கல்லறைப் பகுதி மூடப்பட்டு விட்டது.

''இந்தக் கல்லறை மீது எழுதப்பட்டுள்ள இந்தச் சொற்றொடரைப் படித்துப் பார் :

''இந்தக் கல்லறையானது. தென் இந்தியாவிலிருந்து அன்பர்கள் அனுப்பிய பணத்தைக் கொண்டு கட்டப் பெற்றது !''

ஆமாம் !

செல்லரித்த மனங்களாக — உணர்வற்ற சடலங்களாக — மொழி அறிவற்ற மூடர்களாகத் தமிழ்நாட்டவர் இழிவைத் தழுவிக் கிடந்த காலத்தில், தமிழகம் போந்த போப் ஐயர், தமிழின் தொன்மை — இனிமை — பெருமைகளை எடுத்தியம்பி இயன்ற தொண்டினைப் புரிந்தார்.

அவர் மறைவுக்கு வருந்திய சில நல்ல உள்ளங்களின் நன்றி மலர்களே இன்று இங்கே இந்தக் கல்லறைக்குக் காணிக்கையாகின்றன.

எப்போதுமே நமக்கு இப்படி ஒரு வழக்கம்! தமிழ்த் தெருவில் தமிழ்தான் இல்லை! என்று மனம் வெதும்பிப் பாடினுரே புரட்சிக் கவிஞர், அவருடைய ஏக்கம் தீரும்படி என்ன செய்திருக்கிரேம்!

புகழ்பாடிக் கொண்டிருக்கிரேம்.

போதுமா?

ஆத்திரியக் கண்டத்தை முதன் முதலில் கண்டு அங்கே தொடர்பு வைத்தவர் தமிழர் என்ற பெருமை மிகு செய்தி வருகிறது.

பழம் பெருமையை நமக்குள் அசை போட்டுப்போட்டு அகமகிழ்வடைகிரேம்.

போதுமா?

*சாதி ஒழித்திட ஒன்று — நல்ல*
*தமிழ் வளர்த்திடல் மற்ருென்று*
*பாதியை நாடு மறந்தால் — மற்ற*
*பாதி துலங்குவதில்லை.*
*சாதி களைந்திட்ட ஏரி — நல்ல*
*தண்டமிழ் நீரினை ஏற்கும்*
*சாதி பிணிப்பற்ற தோளே — நல்ல*
*தண்டமிழ் வாளினைத் தூக்கும்.*

பாரதியைப் பற்றிப் பாரதிதாசனுர் இப்படி எழுதிச் சொல்கிருர்.

தண்டமிழ் வாளினைத் தூக்கும் சாதி பிணிப்பற்ற தோளாகத் தமிழர் இன்னும் ஒன்றுபடவில்லையே!

கடல் கடந்து சென்றிருக்கும் தமிழர்கள் ஒன்றுபட்டுத் திகழ்கிருர்கள். தாயகம் திரும்பிப் பார்த்தால் சாதி வேறுபாட்டுப் புகைச்சல் கிளம்பிவிடுகிறது. தமிழுக்குத் தொண்டு செய்த நல்லவனின் கல்லறையை எழுப்புவதற்கு நம்மிடையே இருந்த ஒற்றுமை உணர்வு நம் இன மேம்பாட்டுக்கு மீண்டும் உருவாக வேண்டாமா?

உன் சிந்தனையைக் கூராக்கு!

செந்தமிழ் இனத்தைச் சீராக்கு!

இவண்,
உனதன்புள்ள,
மன்னர் மன்னன்.

---

**மாதங்களில் மார்கழி!**

*'மாதங்களில் நான் மார்கழி' என்று கீதையில் கண்ணன் சொன்னுன்; கண்ணதாசனே 'மாதங்களில் அவள் மார்கழி' என்று பாடினுன். கண்ணனின் காதலி கோதையைக் குறித்துப் பாடியிருப்பானே? அவள்தானே பனித் துன்பம் பாராது அந்தப் பார்த்த சாரதிக்காக நோன்பிருந்தவள். மார்கழி நோன்பு ஏற்படுத்தி மார்கழிக்கே பெருமை சேர்த்தவளாயிற்றே அந்தப் பேதை!*

# 'தென்னை' -- தமிழனின் பிள்ளை!

தமிழ்மணி அரங்க முருகையன்

## பிள்ளை எனப்படுவது பறவையின் குஞ்சே !

'பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை' எனப் பறவையின் இளங்குஞ்சுகள் பார்ப்பு அல்லது பிள்ளை என அழைக்கப்பட வேண்டு மெனத் தொல்காப்பிய இலக்கணங்கூறினும், கிளியின் குஞ்சினைத் தவிர்த்த ஏனைய பறவை களான காக்கை, கழுகு, பருந்து போன்ற வற்றின் இளங்குஞ்சுகள் வழக்கமாக நடை முறையில் பார்ப்பு அல்லது பிள்ளை என அழைக்கப் பெறுவதில்லை. மாறாகக் காக்கைக் குஞ்சு, கழுகுக் குஞ்சு, பருந்துக் குஞ்சு என்றே அழைக்கப்பெறுகின்றன. கிளியின் குஞ்சு மட்டும் கிளிப்பிள்ளை என உலக வழக் கில் அழைக்கப்பெறுகிறது. நாகணவாய்ப் புள்ளின் இளங்குஞ்சும் நாரத்தம்பிள்ளை எனச் சில இடங்களில் அழைக்கப்படுகிறது.

## விலங்கின் குட்டியையும் பிள்ளை எனலாம் !

சிறு விலங்குகளில், கீரி, அணில், ஆகிய வற்றின் குட்டிகள் முறையே கீரிப்பிள்ளை, அணிற்பிள்ளை என அழைக்கப்பெறுகின்றன. கிளிப் பிள்ளை மக்களால் பெருவிருப்போடு வளர்க்கப் படுவதே போல்* கீரிப்பிள்ளையும் அணிற்பிள்ளையும்கூடச் சிலரால் விருப்பமாக வளர்க்கப்படுகின்றன. வெகுநாட்களாகப் பிள்ளை தவழாத வீட்டினர் கீரிப்பிள்ளையை வளர்ப்பின், அவ்வீட்டில் விரைவில் மகவு தவழும் என்பது சிலர்தம் நம்பிக்கை என்பர்.

அத்தோடு சிற்றூர்களில் வாழ்வோருக் குத் தொல்லையும் அச்சமுந் தரும். பாம்புக் குக் கீரி எதிரி என்பதும் நாம் நன்கறிந்ததே.

## சிரிக்கும் ஒரே விலங்கு மாந்தனே !

ஐந்தறிவுடைய விலங்கு, பறவை இவற் றின் இளம் பருவத்தோரைப் பிள்ளை என அழைப்பதில் ஓரளவு நயன்மை (நியாயம்) இருக்கிறது. சிரிக்கும் ஒரே விலங்கு மாந் தனே! (Man is the only laughing animal) என்று சொல்வதில்லையா! ஆனால், விலங்கும் பறவையுமல்லாத நிலத்திணை உயிரான மர

---

*நேயக் கலவி மயக்கத்தே
நிகழ்ந்த வற்றைக்கிளி யுரைப்ப
வாயைப் புதைக்கும் மடநல்லீர்!
மணிப்பொற் கபாடம் திறன்மினோ!
– கலிங்கத்துப் பரணி
(கடைத் திறப்புப் படலம்)

மொன்றின் இளங்கன்றினைப் பிள்ளை என ஏன் தமிழர் அழைத்தனர்; அழைக்கின்றனர் என்பதை ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## மா, பலா, வாழையால் நாம் பெறும் பயன்

முக்கனி எனத் தமிழரால் விரும்பிப் பாராட்டப்பெறுபவை மா, பலா, வாழை என்பனவாம். இவற்றை நல்கும் மரங்களைத் தமிழர்கள் விரும்பி வளர்க்கின்றனர். இவற்றுள் மாமரத்தின் கனி மிக விருப்பமாய் உண்ணப்படுவதே போல், மாவடு, மாங்காய் ஆகியவையும் தமிழர்களின் விருப்பிற்குரியனவே. மாவிலை தோரணமுமாகும், மாந்தளிர், மாம்பட்டை ஆகியவை மருந்தாகப் பயன்படும், மாமரம் கீழே சாயினும்கூட, அதன் அடிமரத்தை அறுத்துப் பலகையாகப் பயன்படுத்துவர். இவ்வாறே வாழையிலிருந்து கிடைக்கும் வாழைப்பழம், வாழைக்காய், வாழைப்பிஞ்சு, வாழைப்பூ, வாழைத்தண்டு ஆகியவை நம் உணவாகப் பயன்படும். வாழையிலை சோறு சாப்பிடப் பயன்படுவதே போல் வாழைப்பட்டையையும் உண்கலமாகப் பயன்படுத்தலாம். பூக்கட்ட நார் தருவதும் இப்பட்டையே. பலாவும் நமக்குப் பல வகையில் பயனுகும்.

## சிறப்புமிக்க ஈகைப் பண்புள்ள தென்னை

இனி, முக்கனியை நல்கும் மரங்களினும் மிகுதியாக நமக்குப் பயன்படும் தென்னையைப்பற்றி ஆராய்வோம்.

பனை, கமுகு, ஈச்சமரப் பிரிவில் மூத்ததான தென்னையைப்போல் நமக்குப் பயன்படும் மரம் வேறெதுவும் இல்லை என்று கூறுவது மிகையாகாது. சுருங்கக் கூறின்,

*அன்பிலார் எல்லாம் தமக்குரியர் அன்புடையார்*
*என்பும் உரியர் பிறர்க்கு.*

என்ற குறட்பா, மாந்தர்க்குத் தன் உடலுறுப்புகளை யெல்லாம் மகிழ்வோடு ஈந்து சிறக்கும் தென்னையின் செம்மாந்த வாழ்வைச் சித்தரிப்பதே போல் உள்ளது. முற்றியத் தேங்காயையும், இளநீரையும் நல்கும் தென்னை, தன் மட்டைகளைக் கீற்றுகளாக்கிக் கொள்ளத் தருகிறது. தன் பாளையை அக்கீற்றுகளைச் சட்டங்களோடு பிணைக்கவல்ல கயிற்றைத் தருகிறது. திருவிழாக்களில், பந்தல் என்றவுடன் நமக்குத் தென்னங் குருத்தோலையைக் கொண்டு ஆக்கப்படும் தோரணங்களே நினைவுக்கு வரும். ஆக்கவேலைக்குப் பயன்படுத்திக் கொள்ளத் தக்க அணு சக்தியை மாந்தன் தன் கோணற்குறையறிவால் அழிவுச் செயல்களுக்கு உடந்தையாக்கிக் கொண்டதே போய், தென்னை, மற்றும் பனை, ஈச்ச மரத்திலிருந்து கள் இறக்கக் கற்றுக் கொண்டான். அடிமரம் கீழே வீழினும் வாய்க்காலைக் கடக்கப் பாலமாகத் தன்னுடலை ஈந்து சிறக்கும்.

## மணற்பாங்கன நிலத்தில் செழித்து வளரும் தென்னை

தென்னை, மணல் வளமுள்ள கடற்கரையோரங்களில் நன்ருக செழித்து வளரும் என்பர். தமிழகத்தில் கடற்கரையிலிருந்து நூறு கல்லுக்கும் அதிகத் தொலைவிலேயுள்ள சிற்றூர்களிலும் தமிழரின் செல்லப்பிள்ளையான தென்னை செழித்து வளரக்காணலாம்.

## சிறப்புமிக்க யாழ்ப்பாணம்

தென்னை, தேங்காய் என்றவுடன் நமக்கு முதலில் நினைவுக்கு வருவது யாழ்ப்பாணமே! யாழ்ப்பாணத்துத் தேங்காய் உருவில் பெரியதாயும் சுவை மிக்கதாயும் உள்ளதென்பதை அனைவரும் ஒப்புக்கொள்வர்.

## தன் பெயரிலேயே தென்னையைப் பிணைத்துச் சிறந்த கேரளம்

தென்னையின் வளத்தைத் தன் நாட்டு முன்னேற்றத்துக்கு முழுமையாகப் பயன்படுத்திக்கொண்ட நாடுகளில் தலையாயது

பிலிப்பைன்சு தென்னையைத் தன் பெயரோடு இணைத்துத் தெங்கின் வளத்தைப் பயன் படுத்தித் தம் பொருள் வளத்தைப் பெருக்கிப் பெருமையுற்ற இந்திய மாநிலம் கேரளம். (நாளிகேரம் = தேங்காய் — வடமொழி) பழங்காலச் சேரர், தென்னையின் உறவு மரமான பனைமரத்தின் பூக்களை மாலையாகத் தொடுத்தணிவர் என்று பழந்தமிழிலக்கி யங்கள் சான்று பகருகின்றன என்பது ஈண்டுக் குறிப்பிடத் தக்கது.

## தென்னை தன் பங்குக்கு ஆங்கிலத் துக்கு ஈந்த இரு சொற்கள்

அரிசி, இஞ்சி, மாங்காய், மிளகு, வெற்றிலை போன்ற பொருள்கள் தம் தொடர் பாகத் தலைக்கு ஒவ்வொரு சொல் மேனியே ஆங்கிலம், கிரேக்கம் போன்ற அயன்மொழி களுக்கு ஈயமுடிந்ததென்றால், தென்னை தன் தொடர்பாகக் கயிறு (COIR), கொப்பறை (COPRA) என்ற இரு சொற்களை ஆங்கிலத் துக்கு வழங்கித் தான் தமிழரின் செல்லப் பிள்ளை என்னும் பெருமையை நிலைநாட்டி யுள்ளளதெனலாம்.

## சூட்டினை ஒரே அளவினதாய் தரும் கருவிக்கு முன்னோடியான கீற்று

தென்னைமரம் இளநீர், தேங்காய்களை மட்டுந்தான் நல்கும்; தென்னையோலையைக் கொண்டு முடைந்த கீற்றுகளை வீட்டுக் கூரைக்குப் பயன்படுத்தின், கோடையில் கடுஞ் சூட்டினைத் தானேற்று அளவான குளிர்ச்சி யை கீழே விடும். குளிர், பனி நாட்களிலோ, மிகுதியான குளிரினைத் தானேற்று அளவான சூட்டையே தர முயலும். இவ்வகையில் தென்னங்கீற்று மரத்தின் பிற்காலத்தே கண்டுபிடித்த சூட்டினை ஒரே அளவாகத் தரும் கருவிக்கு (Air Condition) முன்னோடி என்று கூடக் கூறலாம்.

## தென்னை வழங்கும் தென்னல் (காற்று)

வேம்பு போன்ற மரங்களிலிருந்து வரும் காற்று மாந்தர் உடலுக்கு நலம் பயப்பதே போல், தென்னை மரத்திலிருந்து வரும் காற் றும் உடலுக்கு நலந்தருவதென்பர். அக் காற்று தென்னல் (தென்னையிலிருந்து வரு வது) என்றழைக்கப்படும். இதனாலேயே, பாரதியார், தம் காணிநிலம் வேண்டும் என்ற பாடலில்,

> *''பத்துப் பன்னிரண்டு தென்னை மரம்*
> *பக்கத்திலே வேண்டும் – என்*
> *சித்தம் மகிழ்ந்திடவே நன்று யிளந்*
> *தென்றல் வரவேண்டும்.''*

என்றார் போலும்!

## மக்கள் குரல் கேட்டு மகிழ்ந்து வளரும் தென்னை

இனித் தென்னையை ஏன் தமிழர் பிள்ளை எனத் தம் மகவுக்கொப்பாக எண்ணினர் என ஆய்வோம். முற்றிய நெற்றுத் தேங்காயி லிருந்து முளைத்தெழும் தென்னம் பிள்ளையை (கன்றினை)த் தக்க மணற்பாங்கான இடத் தில் நட்டு, கைப்பிள்ளையை ஈ, எறும்பு மொய்க்காமல் பேணிப் பாலூட்டி வளர்ப்பதே போல், இளந்தென்னம் பிள்ளையை ஆடு, மாடு மேய்த்திடாவண்ணம் வேலியெழுப்பி நாள்தோறும் தவறாது நீர்ப்பாய்ச்சுதல் வேண்டும். பெற்றோரின் குரல் கேட்டுப் பிள்ளைகள் மகிழ்வதே போல் தென்னம்பிள்ளை யும் மக்களின் பேச்சுக்குரலைக் விரும்பிக் கேட்டு மகிழ்ந்து வளருமென்பர் நம் வீட்டுக் கொல்லையில் உள்ள தென்னை, மக்கள் நட மாட்டம் இல்லாத ஊருக்கு அப்பால் வளரும் தென்னையைவிட விரைந்து வளருமென்பர். நிலத்திணை உயிர்கள் இசையைக் கேட்டு மகிழ்ந்து செழிப்பாக வளருகின்றன என்று இந்நாளில் மெய்ப்பிக்கப் பட்டுவிட்டது. ஆனால், இவ்வுண்மையைத் தென்னையின் தொடர்பாக நம் முன்னோர் பல நூற்றாண்டு கட்கு முன்பே அறிந்தனர் என்றறிய நமக்கு வியப்பு மேலிடுகிறது.

> *''தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து*
> *முந்தி யிருப்பச் செயல்''*

என்ற தமிழ்மறைக் கேற்ப நம் வளர்ப்புப்

பிள்ளையான தென்னையை வளர்த்தாகி விட்டது. இனி என்ன? தம் மக்களைச் செல்வமாகக் கருதுதல் தமிழர் பண்பாடு[1&2]. தம்பியுடையான் படைக்கஞ்சான் என்பதுபோல, காப்புறுதி (Insurance), ஓய்வுப் பணமுறை (Pension) ஆகியவை பற்றி எண்ணமெழாத அந்த நாளிலே, பெற்ருேர், தம் பிற்கால (முதுமை) நல்வாழ்வுக்குப் பிள்ளைகளையே நம்பியிருந்தனர். பிள்ளைகளும், தம் பெற்ருேர் தம்மிடம் காட்டிய அன்பினை, பரிவினை மறவாது நன்றியோடு, பெற்ருேர் முதுமையுற்றபோது அவர் நலம் பேணினர். இஃது தமிழரின் செல்ல (வளர்ப்பு)ப் பிள்ளையான தென்னைக்கும் பொருந்தும். தென்னை, தமிழ் மக்களின் வளர்ப்புப் பிள்ளையாக, அவர்தம் அன்பில் திளைத்து வளர்ந்து, பருவமெய்தியதும் தம்மை வளர்த்தோருக்கும் அவர்தம் சந்ததியினருக்கும் இளநீர் தேங்காய் முதலியனவெல்லாம் நன்றியோடு நல்கி மகிழ்கிறது.

> *''நன்றி ஒருவர்க்குச் செய்தக்கால்*
> *அந்நன்றி*
> *என்று தருங்கொல் எனவேண்டா-நின்று*
> *வளரா தளர்தெங்கு தாளுண்ட நீரைத்*
> *தலையாலே தான்தருதலால்''*

என்று நன்றி அறிதலில் தென்னைக்கிணையான நிலத்திணை உயிரில்லை என்பது மட்டுமின்றி, தென்னையை உயர்திணை உயிரினரான மாந்தரோடு[3] சமமாக வைத்துப் பாடிச் சிறப்பித்தார்.

## தென்னம் பிள்ளையை நம்பலாம்

மக்கள் தாம் வளர்க்கும் தென்னை பிற்காலத்தே தமக்குதவும் என்று கருதியதை, 'தென்னம் பிள்ளையை நம்பினுலும் அண்ணன் பிள்ளையை நம்பலாகாது' என்ற பழமொழியின் துணைகொண்டும் நன்கறியலாம்.

## மாந்தர் பலர் வருவாய் தேட வழிவகுக்கும் தென்னை

தமிழகத்தில் மணற்பாங்கானப் பற்பலச் சிற்றூர்களில் கணிசமான அளவினரான மக்கள் தென்னையின் வளத்தை நம்பி வாழ்கின்றனர். கேரள மாநிலத்தின் பெரும்பான்மையான பகுதிகளில் தென்னை வளத்தை முற்ருகப் பயன்படுத்தி முன்னேற்றங் கண்டுள்ளனர். தேங்காய் மட்டைகளிலிருந்து கயிறு திரிப்பதும், அக்கயிற்றினைக்கொண்டு வீட்டு வாசலில் போடத்தக்க மிதியடி, மற்றும் வடம், மணிக்கயிறு போன்றவற்றைச் செய்வதும் நல்ல ஆதாயமிக்க குடிசைத் தொழிலாக அங்கே வளர்ந்துள்ளது. பல்லாயிரக் கணக்கான ஆண், பெண்டிர் அத்தொழிலில் ஈடுபட்டுள்ளனர்.

## கடும் உணவுப் பஞ்சத்தை முறியடித்த தென்னை

முடிவாக, மலையா நாட்டில் வாழ்ந்த தமிழர், அந்நாடு யப்பானியரால் கைப்பற்றப்பட்டபோது ஏற்பட்ட கடும் உணவுப் பஞ்சத்தைத் தென்னைமரம் நல்கும் தேங்காயைக் கொண்டு எப்படி முறியடித்தனர் என்பதை அறியின் தென்னையின் பெருமையை, சிறப்பினை நாம் நன்குணர முடியும்.

''எங்கள் வீட்டுக் கொல்லையில் ஏழெட்டுத் தென்னைமரங்கள் இருந்தன. அவை ஆண்டு நெடுகிலுமாகக் காய்க்கும். எங்கள் வீட்டில் எப்போதும் தேங்காய்க்குப் பஞ்சம், பற்ருக்குறை இருந்ததில்லை. காலை உணவுக்குப் பெரும்பாலும் வீட்டுக்கு முன்னும் பின்னும் வளர்ந்துள்ள மரவள்ளிக்கிழங்கோடு, நிறைய தேங்காய்ப் பூவும் சிறிது சர்க்கரையும் சேர்த்து சாப்பிடுவோம். பெரும்பான்மையான நாட்களில் நண்பகலில் சாப்பிடுவதில்லை. மிகப் பசியாயிருப்பின் ஓரிரு இளநீரைக் குடிப்போம்.

---

1. *'தம்பொருள் என்ப தம்மக்கள்,' அவர்பொருள்*
   *தந்தம் வினையான் வரும்.* (குறள்)
2. *'பெறுமவற்றுள் யாமறிந்த தில்லை அறிவறிந்த*
   *மக்கட் பேறுஅல்ல பிற.* (குறள்)
3. *'எந்நன்றி கொன்ருர்க்கும் உய்வுண்டாம்; உய்வில்லை*
   *செய்ந்நன்றி கொன்ற மகற்கு'* (குறள்)

வெயிலில் இளநீரும் எருமைத் தயிரும் அமிழ்தாக எங்களுக்குத் தோன்றும். மாலை யில் வீட்டுக் கொல்லையில் வளர்ந்துள்ள முருங்கை மரத்திலிருந்து கீரையைப் பறித்து, மிகுந்த அளவில் தேங்காய்ப் பூவைச் சேர்த்துச் சமைத்து, கஞ்சி அல்லது சோற் ேறாடு தயிர்கலந்து உண்போம். ஆகவே, தென்னைமரம் வழங்கிய தேங்காய், முருங்கை மரக்கீரை, காய், மரவள்ளிக் கிழங்கு எருமைத் தயிர் ஆகியவற்றின் உதவியால் அந்தப் பஞ்சகாலத்தில் நாங்கள் உயிர் பிழைக்க முடிந்தது.'' என்று விளக்கமாகக் கூறிய சில தமிழ்க் குடும்பத்தினர் வாயிலாகத் தமிழரின் செல்லப் பிள்ளையான தென்னையின் சிறப்பினை நாம் நன்குணரமுடியும்.

மாந்தர் வாழ உதவும் ஈகைப் பண்பு நலமிக்க தென்னை வாழ்க!



## வாழ்க்கைக் குறிப்பு

முருகையன், தமிழகம் – கும்பகோணத் தில் 1932ம் வருடம் திரு. அரங்கசாமி– செல்லம்மாள் தம்பதியர்க்கு மூத்தமகனுய்த் தோன்றினுர்; தம் உயர்நிலைப் பள்ளிப் படிப்பை முடித்த பின், பள்ளியாசிரியராகப் பணியாற்றினுர்.

பின்னர் சிங்கை சென்று ஆங்கே 'மலாயா நண்பன்' நாளிதழில் துணையாசிரி யராகச் (மொழிபெயர்ப்பாளர்) சிறிது காலம் பணியாற்றிப் பின் பிரித்தானிய வானூர்த்திப் படையில் சேர்ந்து இருபது ஆண்டுகள் பணி யாற்றித் தலைமை எழுத்தர் தகுதி நிலைக்கு யர்ந்தார்.

1972இல் தமிழகம் திரும்பிய இவர், 'நித்திலம்' எனும் இலக்கியத் திங்களிதழை தொடங்கிப் பின் இலண்டனுக்கு வந்து வானூர்தி நிலையத்தில் பணியாற்றுகிருர்.

இவர்தம் படைப்புகள் (கதை, கட்டுரை, பாடல்கள் எண்ணிக்கையில் 150) தமிழக, சிங்கை, மலேசிய, தமிழ் ஈழ இதழ்களில் வெளிவந்துள்ளன. மூன்று குறுநாடகங்கள் சிங்கை வானொலி நிலையத்தாரால் ஒலிபரப் பப்பட்டன. தமிழ்மணி எனும் பட்டத்தேர்வில் தேறியுள்ள முருகையன், தற்போது மேற்கு இலண்டன் தமிழ்ப் பள்ளியில் ஆசிரியராகவும் திருவள்ளுவர் தமிழ்ப்பள்ளியின் தேர்வாள ராகவும் இலண்டன் முரசின் சிறப்பாசிரிய ராகவும் இருக்கிருர். ஆங்கிலத்திலும் தமிழி லும் நூல்கள் எழுதி வெளியிட்டுள்ளார்,

# தாமரைக் கண்ணான் உலகு



அ. ஜெபரத்தினம்

''தெருவெங்கும் தமிழ் முழக்கம் செய்வோம் வாரீர்' என்ற அழைப்பினைக் கேட்டு விழிப்படைகிறான் தமிழன். பட்டி தொட்டிகளிலெல்லாம் பட்டி மன்ற பாசறைகள் அமைகின்றன. வள்ளுவன் கவிஞனா அல்லது அறிஞனா என்ற சொற்போரின், எதிர் நிற்போரில் கவிஞனெனக் காட்டிடத் துடிப்போனின் கண்களில் பன்னீர் அரும்புகள் பூக்கின்றன. வள்ளுவனை கவிஞனென ஒப்புக்காகக் கொள்ளலாம்; ஆனால் அறிஞனென ஒப்புக்கொண்டுதான் ஆகவேண்டுமென சுவையான தீர்ப்பு வழங்கப்படுகிறது. இருப்பினும் அந்தக் கலங்கிய கண்கள் வள்ளுவனைக் கவிஞனெனவே காண்கின்றன.

அன்னிய மொழியினருக்குத் தான் அசைச் சீர், அணி, இசையின்பம் என்று கவி நயந்தெரியவும், கவிநயந்துரைக்கவும் தெரிய நியாயமில்லை! இனிய தமிழ் மொழியினர்க்குக் கூடவா தெரியாது? ஒருவேளை மாதுளைபோல் உடைத்துச் சுவைப்பதற்கும் குறும்பலாபோல் வகுத்துச் சுவைப்பதற்கும் வகை தெரியாமலிருக்கலாம்! ஏனைய வரிகள் வறிதே கிடப்பினும் காமத்துப்பாலின் வரிகள் அவனைக் கவிஞனெக் கூறி, அவனது சேவடிகளுக்கு காவடி தூக்க வரிந்து கட்டுகின்றன.

ஊனிலுறும் இன்ப உணர்ச்சிகளைத் தீய்த்த ஞானியின் வடிவில் உள்ள வள்ளுவன் ஊனிலூறும் இன்ப ஊற்றுச் சுனையாகவும், மேனிமலர் மொய்த்த தேனியாகவுமன்றோ. காமத்துப்பாலினைப் பிய்த்து வைக்கிறான். அறத்துப்பாலில் கர்மராஜ்யத்தையே கட்டி

யாண்டவனை, மரத்துப்போனவன் என்று நினைத்துப் பார்க்குமுன், காமராஜனாகக் காட்சியளிக்கிறான்.

அந்த வள்ளுவன் புணர்ச்சியின் மகிழ்ச்சியைக் கூறும்பொழுது கொண்ட புத்துணர்ச்சிக்கு அளவே கிடையாது! நீங்கின் தெறூஉம் குறுகுங்கால் தண்ணென்னும் தீ என்கிறான்; 'தம்மில் இருந்து தமது பாத்து உண்டாற்றல்' என்கிறான்; 'வேட்ட பொழுதில் அவை-அவை போலுமே' என்கிறான்; இதில் காமதேனு அல்லது கற்பக விருட்சத்தை காரணம் காட்டாமல் காட்டிச் செல்லும் அழகே தனி! அந்த கற்பனைப் பாத்திரங்களையெல்லாம் எட்டி உதைத்துவிட்டு அதிலுள்ள கற்பனையை மட்டும் கையாள்கிறான்.

ஒருத்தியை—காதல் கிழத்தியை காமக் கிளர்ச்சியுடன் புணர்ந்து, பின்னர் உணர்ந்து, புணர்ச்சியின் மகிழ்ச்சியைக் கூறும்பொழுது இன்பத்தின் எல்லை என்னும் அளவினை எட்டுகிறான்; அதற்குமேல் இன்பம் இல்லை என்றும் மார்தட்டுகிறான். அந்தக் காதல் கிழத்தியை எடுத்தாள்கிறவன்தான், எழுத்தாளனாக இருப்பானோ என்று எண்ணு மளவிற்கு வள்ளுவன் சென்றுவிடுகின்றான். இருப்பினும் அவளை எடுத்தாள்கிறவன் எப்படி திருப்தி அடையவில்லையோ, அப்படியே எழுத்தாளனும் அவனது எழுத்தில் திருப்தி அடையாத நிலையில்,

*'தாம்வீழ்வார் மென்தோள் துயிலின்*
*இனிதுகொல்*
*தாமரைக் கண்ணான் உலகு,'* என்கிறான்.

இந்தப் பாடலின் புத்திரன், புணர்ச்சியில் தான் யாருக்கும் சளைத்தவனில்லை யென்றும் பாடலின் புத்திரியும் அவனுக்கு இளைத்தவளில்லை யென்னும் அளவில் புணர்ந்தபின், புணர்ச்சியை உணரும் நிலையில் உள்ளனர். காதலன் அவளின் தோளில் தலைசாய்த்துத் துயில்கிறான். 'துயில் என்பது வேறு; உறக்கம் என்பது வேறு,' என்ற உண்மையை வள்ளுவன் அந்த இரண்டு வார்த்தைகளையும் கையாளும் விதத்திலிருந்து அறியலாம்.

''உறங்குவது போலுஞ் சாக்காடு! என்று அவன் கூறும்பொழுது, 'உறக்கம் என்பது மனம் ஆழ்ந்த அமைதியுடைய ஒரு நிலை, என்பதும், 'துஞ்சுங்கால் தோள்மேலாகி' என்னும்பொழுது 'துயில் என்பது மனம் அலையும் உறக்கத்தின் ஆரம்ப நிலை', என்பதும் தெளிவாகிறது. எனவே காதலியின் தோளில் தலை சாய்த்து துயிலும் பொழுது கண்கள் காட்சியினை உணரத் தவறியதில்லையென்ற உண்மை வெளிப்படுகிறது. ஆயினும் முதல் வரியில் எந்தச் சர்ச்சையும் எழ வாய்ப்பில்லை.

இரண்டாம் வரியிலுள்ள 'தாமரைக் கண்ணான் உலகு' என்பதில் வள்ளுவன் இமையவர் உலகினைச் சுட்டுகிறானா அல்லது இவ் உலகினைத்தான் சுட்டுகிறானா என்பதே எழுந்துள்ள கேள்வி! 'வேட்ட பொழுதில் அவை அவை போலுமே! என்ற பொழுது, கற்பக விருட்சத்தை காரணம் காட்டாமல் காட்டிச் செல்லும் வள்ளுவன், இங்கு மட்டும் துணிந்து 'தாமரைக் கண்ணான் உலகு' என்று ஒரு கற்பனை உலகினைச் சமைப்பானா என்ற ஐயம் திரிபற வேண்டும்.

கம்பன் காதையில் ஒரு காட்சி! சிவதனுசை எவனொருவன் எடுத்து, வளைத்து, ஒரு நாணேற்றுகிறானோ, அவனே ஜனகனின் மகளுக்குத் திருநாண் பூட்ட தகையோனென, ஓலைகள் அனுப்பப்பட்ட காலையில், மிதிலை கயிலையாய்க் காட்சி தருகிறது. ராஜரிஷியும், ராஜேஸ்வரியும் வீற்றிருக்கிருர்கள். பிரம்மரிஷியும், பின்னே ராமலட்சுமணனும் வருகிறார்கள்!

ஐந்தில் இருந்தே வளையாத வில்—ஐம்பதில் வளையுமா? இல்லை; ஐம்பத்தாறு தேசத்து அரசர்களும் முயன்றாலும் அம்புதான் அதில் நுழையுமா? சரி, ஐயாறு வயதினனான ராமன்தான் வளைப்பானா என்ற ஆர்வம் சூழ்கிறது. ராமன் எழுகிறான் குருவினைத் தொழுகிருன்; வில்லினை எடுக்கிறான். கம்பன் அந்தக் காட்சியை,

*'தடுத்திமை யாமல் இருந்தலர் தாளில்*
*மடுத்ததும் நான்நுதி வைத்ததும்*
*நோக்கார்*
*கடுப்பினில் யாரும் அறிந்திலர் கையால்*
*எடுத்தது கண்டார் இற்றது கேட்டார்!*

என்கிறான்.

எவனோ ஒருவன் வில்லினை வளைக்க இருந்தவரெல்லாம் தடுத்தமையாமல் இருந் தனராம். இருப்பினுங் கூட, ராமனது செயல் வேகத்தில் அநேகக் காட்சிகள் கண்களுக்கு எட்டாமல் தப்பி விட்டன. வில் இற்றதைக் கூட காணமுடியவில்லை; கேட்கத்தான் முடிந்தது! இதற்கே இப்படியாயின் காமக் கண்களின் பாய்ச்சலில் — மேய்ச்சலில் ஒய்வேது? ஒழிச்சலேது? தாமரையாக கண் கள் இமையாதிருக்கின்றன! ஆனால் இமை யவர் உலகமல்ல! இமையாது பார்க்கும் காதலர் உலகம்!

வள்ளுவன் 'தாமரைக் கண்ணன் உலகு! என்று கூறினல் கூட இமையவர் உலகு என்று கொள்வதில் அர்த்த புஷ்டி யிருக்க லாம்; 'தாமரைக் கண்ணான் உலகு! என்று கூறி 'ஆன்' விகுதியை யேற்றியிருப்பதி லிருந்து கொஞ்ச நஞ்ச மிகுந்த பிடிப்புமற்று விடுகிறது. தொல்காப்பியத்தில் மூன்றாம் வேற்றுமை உருபாக 'ஆன்' காட்டப்படவே யில்லை. 'ஒடு' என்ற மூன்றாம் வேற்றுமை உருபு மட்டுமே காட்டப்படுகிறது.

*'ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் கிளவி*
*வினைமுதல் கிளவி அனைமுதற் றதுவே!*

எனவே தொல் வழக்கற்ற 'ஆன்' விகுதியை வள்ளுவன் இப்படியொரு இனிமையமைத் துப் பாட சிரத்தையெடுத்திருக்கிறான் என் பது தெளிவாகிறது.

*'இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து*
*கெடுக இவ்வுலகு இயற்றியான்'*

என்னும் குறளில், உலகியற்றியான் என் பதில் 'ஆன்' விகுதியேற்றியிருப்பதுபோல, 'தாமரைக்கண்ணன் உலகு' என்பதிலும் 'ஆன்' விகுதியேற்றி தடுத்து இமையாமல்— தாமரையாக கண்கள் இமையாது பார்த் தலின் உண்டாகும் காதலரின் இன்ப உலகத் தினைச் சுட்டுகிறான்.

இன்னும் கம்பனின்,

*'தண்டலை மயில்களாட*
*தாமரை விளக்கந் தாங்க*
*கொண்டல்கள் முழவி னேங்க*
*குவளைகண் விழித்து நோக்க'*

என்பதிலுள்ள 'குவளைக்கண்' கூட வள்ளு வனின் 'தாமரைக் கண்ணுக்கு' நேராகலாம்!

எனவே, இணக்கத்துக்குரிய காதலின் தோளில் தலை சாய்த்து துயிலும் உலகமே, தனிஉலகம். இமைகளை மூடினாலுங்கூட, கண்கள் ஓயவில்லை! துயில்வது போலுங் கண்கள், மயிலின் தோகையின் கண்களாக ஆலாபஞ் செய்கின்றன. நடையழகும், உடை யழகும், இடையழகும், தொடையழகும் கடைக் கண்ணழகு மென்றதந்தப் பெண் ணழகைப் பொன்னழகை பார்த்துப் பார்த்துக் கண்கள், தாமரையாக பூத்துப்போவதைவிட அந்தக்காட்சியினை எண்ணத் திரை யென்னும் வெள்ளித்திரையிலிட்டு கண்மூடிக் கிடந்து ரசிப்பதே இனியது என்பதுதான் குறள் தரும் பொருள்!



# இன்றைய இலக்கிய உலகம்

பொற்கோ,
*இளநிலைத் தமிழ்ப் பேராசிரியர்,*
*சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.*

இன்றைய நிலையில், தமிழ் இலக்கிய உலகில் நாவல் சிறுகதை, கட்டுரை, கவிதை முதலியன இலக்கியப் படைப்புகளாகக் கருதப்படுகின்றன. நாவல், சிறுகதை முதலியவற்றைப் படைப்பவர்கள் எல்லோரும் எழுத்தாளர்கள் என்று கொண்டால் இன்றைய இலக்கிய உலகில் எழுத்தாளர்கட்குப் பஞ்சமில்லை.

## கவிஞர்களும் எழுத்தாளர்களே!

கவிதை எழுதுகின்றவர்கட்குக் கவிஞர் என்று வேறொரு குழுப்பெயர் அல்லது சிறப்புப் பெயர் இருப்பதால் அந்தப் பெயர்க்குரியோர் பலர் எழுத்தாளர் குழுவில் அடங்கி வருவதில்லை. கவிஞர் குழுவினர் தம்மை எழுத்தாளர் என்று அழைத்தால் தமக்கிருக்கும் சிறப்பு குன்றிவிடுவதாக நினைக்கிறார்களோ அல்லது உரை நடக்கும் கவிதைக்கும் உள்ள அடிப்படை வேற்றுமைக்கேற்ப அவற்றின் படைப்பாளர் பெயரிலும் வேற்றுமை வேண்டும் என்று விரும்புகிறார்களோ தெரியவில்லை! எப்படி இருப்பினும், கவிஞர், எழுத்தாளர் என்ற இரண்டுக்கும் இடையே ஓரளவு இடைவெளி இருக்கிறது என்பது அவர்களைப் பொறுத்தவரை நியாயமான உண்மையாக இருக்கலாம்! ஆனால் கவிதை எழுதுபவர்களையும் எழுத்தாளர் என்று கொள்ளுவதால் தவறு ஒன்று இருப்பதாகத் தெரியவில்லை. சிறப்பாகக் கூற நேர்ந்தால் மட்டுமே கதையாளர் கட்டுரையாளர், கவிஞர் என்று வேறுபடுத்திக் கொள்ளலாம்

## காவியங்களும் நாவல்களும்:

''இருபதாம் நூற்றாண்டில் தலைசிறந்த காவியங்கள் ஒன்றுமே வரவில்லை— ஏன் வரவில்லையென்றால் இப்போது சிறந்த காவியங்கள் எழுத யாராலும் இயலவில்லை என்று மேடையில் பல காவிய ரசிகர்கள் முழக்கமிடுகிறார்கள்.

இருபதாம் நூற்றாண்டில் ஒன்றுமே நடக்கவில்லை என்பவர்கள் சாதாரணமான

பாமர மக்களாக இருந்தால் அதை பொருட்படுத்த வேண்டியதில்லை. சில தமிழ்ப் பேரறிஞர்களும் பேராசியர்களும் கூட, இப்படியே பேசிவருவதில் மகிழ்ச்சி அடைகின்றனர். அவர்கள் கூறும் குறைபாட்டில், அவர்கட்குப் பங்கே இல்லையென்று நினைத்துக் கொள்கிறார்கள் போலும்! இந்தக் குறைபாட்டைப் போக்க அவர்கள் இதுரை எந்த முயற்சியும் எடுத்துக்கொண்டதாகவும் தெரியவில்லை. அல்லது ஆழச் சிந்தித்துச் சிறந்த ஆலோசனைகளை வழங்கிவிடவும் இல்லை!

அவர்கள் கூற்றில் அவ்வளவு தூரம் உண்மையிருப்பதாகத் தெரியவில்லை. டாக்டர் உ. வே. சா அவர்களின் குருவான மகா வித்வான் மீனாட்சி சுந்தரனார், ஏறக்குறைய இருப்பதாயிரத்துக்கு மேற்பட்ட பாடல்களைப் பாடியிருக்கிறார். இவற்றுள் பல தல புராணங்களும் பிரபந்தங்களுமாக அமைந்தன. புலவர் குழந்தை அவர்கள் 'இராவண காவியம்' பாடியிருக்கிறார். பாவேந்தர் பாரதிதாசனார் 'பாண்டியன் பரிசு' 'மணிமேகலை வெண்பா' முதலியவற்றைப் படைத்திருக்கிறார். கவியரசு கண்ணதாசன் 'ஆட்டன் அத்தி ஆதிமந்தி' 'மாங்கனி' முதலியவற்றை இயற்றியுள்ளார். உயர்திரு கிருட்டிணசாமி 'வள்ளுவர் காவியம் என்றொரு காவியம் படைத்தளித்தார். இந்தக் காவியப் படைப்பாளர்கட் கெல்லாம் இது வரை என்ன சிறப்பு செய்து ஊக்கம் ஊட்டினோம். கவிஞர் முடியரசன் 'பூங்கொடி' என்றொரு காவியத்தைப் படைத்து வழங்கினாரே? வெளியீட்டு விழாவும் சிறப்பாக நடந்ததே! அந்த அளவுக்கு அதற்கு வரவேற்பு கிடைக்கவில்லை என்பதுதான் உண்மை. இருபதாம் நூற்றாண்டில் சிறந்த படைப்புகள் ஒன்றுமே இல்லை என்று கூறுபவர்கள் திறனாய்வு செய்து, "பாருங்கள், இவையெல்லாம் வெறுஞ்சக்கைகள்; ஒன்றும் சாரமில்லை" என்றாவது காட்டியிருக்கலாம். அப்படியும் இதுவரையாரும் செய்ததாகத் தெரியவில்லை.

தமிழ் நாவல்களைப் பொறுத்தவரை காவியங்களைப் படிப்பவர்களின் தொகையை விட, நாவல் வாசகர்களின் தொகை சற்று அதிகமாகவே இருக்கிறது. இருந்தும், காவிய ரசிகர்கள் சிலர் நாவல் படிப்பவர்களைக் கொஞ்சம் குனிந்து பார்க்கிறார்கள். காவிய ரசிகர்கட்கு, நாவல் படிப்பது ஏதோ ஒரு பாவம் போலத் தோன்றுகிறது! நாவல் ரசிகர்கள் காவிய ரசிகர்களைவிட ஒரு வகையில் மாறுபட்டிருக்கிறார்கள் என்பதைக் கூறாமல் இருக்க இயலவில்லை. இவர்கள் இருபதாம் நூற்றாண்டில் நாவலே இல்லை என்று கூறுவதில்லை.

காரணம், இவ்வகையில் மு. வ. அகிலன் பார்த்தசாரதி, ஜெயகாந்தன் முதலிய பல அன்பர்கள் 'இல்லை' என்ற சொல்லைத் துள்ள வொட்டாமல் இழுத்துப் பிடித்திருக்கிறார்கள். காலஞ்சென்ற கல்கி, வேதநாயகம்பிள்ளை ஆகியோரின் பங்கு சொல்லாமலே விளங்கும். பல்வித இடையூறுகட்கும் – தாக்குதல்கட்கும் இடையே நாவலாசிரியர்கள் தங்கள் உள்ளக் கிளர்ச்சிகளையும் அரிப்புகளையும் அப்படியே இலக்கியப் படைப்புகளாக்கி வழங்கிவருகிறார்கள். நாவல்களைப் பற்றியுங்கூட ஒருவகையான குறைபேசப்பட்டே வருகிறது. இந்திய மொழிகளில் தமிழ் நாவல்களுக்குச் சிறப்பான இடம் கிடைக்குமளவில் இங்கு நாவல்கள் வெளிவருவதில்லையே என்று குறைபட்டுக் கொள்கிறார்கள். நாவல் எழுதுபவர்கள் தாங்கள் வெளியிட்ட நாவல்களின் மூலம் என்னென்ன பயனைப் பெற்றார்கள் என்று அவர்களுக்கு மட்டுமே தெரியும். அச்சுக்கூடத்தில் அச்சேறிய பிரதிகள் எத்தனை என்பதும் வெளியுலகில் நடமாடிய பிரதிகள் எத்தனை என்பதும் வாசகர்களுக்குத் தெரிய முடியாது. மிகச் சிறந்த நாவல்களைக்கூட வாசகர்கள் ஒருமுறை இரவல் வாங்கிப் படித்துவிட்டு, விலைகொடுத்து வாங்கிய அருளாளரிடம் கொடுத்துவிடுகிறார்கள். இதனால் யாருக்கும் எவ்விதமான பாதிப்பும் ஏற்படுவதாக நினைத்துப் பார்ப்பதுகூட இல்லை! எழுத்தாளர்கள் எல்லோரும் பிள்ளை குட்டிகள் இல்லாத-சுய தேவைகள் ஏதும் இல்லாத புதுவகை மனிதர்களல்லர் எனவே வாசகர்கள் சொந்தத்தில் புத்தகங்கள் விலைகொடுத்து வாங்கிப் படிப்பதன் அவசியத்தை உணர வேண்டும்.

## கதைகளும் கவிதைகளும்

கதையாளர்கள் கவிஞர்களின் வேலை மிக எளிதென்றும் கவிஞர்கள் கதையாளர்களின் வேலையே மிக எளிதென்றும், ஒருவரை யொருவர் தவருகக் கணக்கிடுகின்றனர். கதை எழுதும் இளம் எழுத்தாளர்கள் படும்பாடு சொல்லிமுடியாது. காலப் போக்கில் அவர்களுக்கு மாபெறும் வெற்றியும் ஏற்படுகிறது. இங்கு நாம் நன்கு நினைவிற்கொள்ளவேண்டியது ஒன்று உண்டு. கதைப்படிப்பவர்கள் தொகையும் கணிசமான அளவுக்கு உயர்ந்தே இருக்கிறது. நமது நாட்டுப் பத்திரிக்கைகள் பெரும்பாலும் கதைகளையே மையமாகக் கொண்டு நடமாடுகின்றன. கதையைப் பொறுத்தவரையில் எங்கும் எதிர்ப்புக்குரல் களையோ திறனய்வுக் குரல்களையோ காணேம். கதை படிப்பவர்களின் தொகை பெருகியிருக்கிறதே தவிரக் கதையைப்படித்து அதன் சரியான தரத்தை மதிப்பிடும் திறம் போதிய அளவுக்கு வளரவில்லை என்பதும் நினைவிற் கொள்ளற்பாலது. கதைகளைப் படிப்போர் பலர் ஏதாவது படிக்க வேண்டும் என்பதற்காகவும் கதைபடிக்கிருர்கள். படித்த பிறகு படித்து முடித்துவிட்டோம் என்ற ஒரு எண்ணத்தோடு மட்டும் அமைதி பெறுகின்றனர். காரணம் அதற்குமேல் சிந்திக்க அவர்களால் இயல்வதில்லை. இன்னுமொரு விசித்திரமான சூழலும் தமிழிலக்கிய உலகில் உண்டு. இளமை ததும்பி நிற்கும் ஒரு பகுதியினரைச் சில பாலுணர்ச்சிக் கதைகள் (கவிதைகளும்தான்) கவருவதில் ஒன்றும் வியப்பில்லை. இந்தப் பொய்க்கவர்ச்சி ஒன்றையே மையமாக்கி மறைமுகமாக வணிகச் சரக்காக்கிக் கலை என்ற பெயரால் ஆபத்தான வாணிபத் தொழில் இப்போது நடைபெற்று வருகிறது. இளஞ் சமுதாயங் கட்கு இப்போலிக் கவர்ச்சியை விலக்கி நிற்கும் அறிவாற்றல் இன்னும் வரவில்லை எப்படி இருப்பினும் இந்தப் போலிக் கலைக்கு நிலைத்த வாழ்வு கிடைத்துவிட முடியாது.

கதைகளை ஓரளவு அறிவுக் கண்ணேட்டத்துக்கு இடங்கொடுத்துப் பார்ப்பவர்கள் இல்லாமலில்லை. முன்னுக்குப்பின் முரண்பாடுகள் இல்லாததாகவும், சமுதாயச்சிக்கல் களைக் காட்டி அவற்றைத் தீர்க்க வழிகாண்பதாகவும், உண்மைக்கும் நடைமுறைக்கும் இயைந்ததாகவும், கதையைப் படித்து முடித்தவுடன் உண்மையான நிகழ்ச்சியில் உண்டாவதைப் போன்ற அனுபவத்தை அளிப்பதாகவும் அமைந்த கதைகள் அறிவுக் கண்ணேட்டத்துக்கு இடங்கொடுத்துப் பார்ப்பவர்களால் நன்கு பாராட்டப்படுகின்றன.

சிறுகதைகளும் இலக்கியமே என்று கருதி அவற்றைப் போற்றிப்பாதுகாக்கும் இயல்பு இன்னும் தமிழர்களிடையே பரவவில்லை; உண்டாகவே இல்லை என்ருலும் தவருகாது.

கதைகளின் நிலைதான் இப்படியென்ருல் கவிதைளின் நிலையோ சொல்லிமாளாது. தமிழ் நாட்டில் என்றுமே இல்லாத அளவுக்குக் கவிதை எழுதுவோர் தொகை இன்று பெருகியுள்ளது. இவர்களில் பலர் கவிதை எழுதுவதன் மூலம் தம்மைப் பலருக்கு அறிமுகப்படுத்திக் கொள்ள விரும்புகிருர்கள் என்று கூறுமளவுக்கு இவர்களின் போக்கு அமைத்துள்ளது. கவிதை எழுதுவதை இடைவிடாமல் தொடர்வதற்கு ஏற்றதொரு கருவைப் பலர் உள்ளத்தில் காண இயலவில்லை. இருப்பினும் கவிதை எழுதும் ஆர்வம் வெள்ளம்போல் பெருகியிருக்கிறது. இதனை ஒரு வகையில் வளர்ச்சியின் பகுதியாகவே கருதுவதற்கு இடமுண்டு கவிதை படிப்பவர்கள் நீண்ட கவிதைகளைப் படிக்க மிகவும் தயங்குகிருர்கள்.

தம் உள்ளத்தைத் தொடுகின்ற கவிதைகளையன்றி மற்ற கவிதைகளை அவர்கள் தொடுவதே இல்லை! கவிதைகளுக்குள்ள பல்வேறு வகைப்பட்ட ஓசைகளை இக்காலத்து வாசகர்கள் கவனியாது விட்டுவிடுகிருர்கள். கவிதைகளையும் உரைநடையைப் படிப்பது போலவே படிக்கின்றனர். இப்படிப் படிப்பதால் கவிதை எழுதுபவர்களில் பலர் பாடல்களின் ஓசைகளைப் பற்றித் அக்கரை காட்டுவதில்லை. ஓசைப் புறக்கணிப்பு கவிதைக்கு ஏற்படுகின்ற ஒருவகை இழப்பேயன்றி வேறல்ல. ஓசையைப் புறக்கணிக்க வேண்டாம் என்ருல் கவிதையில் பிறக்கும் பல்வேறு கிளைகளை வெட்டி வீழ்த்துவதாக யாரும் தவருகக் கருத

வேண்டா. கவிதையைப் படிப்போர் அமைதியோடும் நிதானத்தோடும் படிக்கும்போது அதனுல் ஒருவகையில் இன்பம் எய்துகின்றனர். போகிற போக்கில் அவசரம் அவசரமாகக் கவிதையை ஒரு பார்வை பார்த்துவிட்டு அதைப்பற்றிச் சிலர் விரிவுரையை, வெற்றுரையாக நிகழ்த்துவதை வேரறுக்க வேண்டும்.

காவியங்களையே வரவேற்றுப் படிப்பதாகப் பேசிக் கொண்டிருக்கும் பெரியவர்கள் துண்டுக் கவிதைகளைக் கூடியவரையில் படிப்பதே இல்லை. புதிய முயற்சிகளால் பிறந்த புதுக்கவிதை இப்போது ஒரு புதிய இலக்கிய வகையாக வளர்ந்திருக்கிறது என்பதை மட்டும் யாரும் மறுக்க இயலாது. துண்டுக் கவிதைகளில் எப்படியோ வாசகர்கட்கு இனம் தெரியாத நாட்டம் இருக்கந்தான் செய்கிறது. துண்டுக் கவிதைகளில் எழுத்தாளர்கள் புதுப்புது மாற்றங்களை உண்டாக்கி ஒத்திகை பார்க்கிருர்கள். இதன் வெற்றி தோல்விகளுக்கு காலமாற்றம்தான் பதிலளிக்கக் கூடும்.

**கட்டுரைகள்:**

இப்போதைய நிலையில் கட்டுரை எழுதுவோர் தொகையும் கட்டுரை படிபோர் தொகையும் குறைவென்றே தோன்றுகிறது. அதிகம் படித்தவர்கள் கூட கதை, கவிதை, நாவல் போன்ற பிறதுறைகளை நாடுகின்றனர். வெளிவருகின்ற மிகச் சில கட்டுரை நூல்களும் கூட, பாடப் புத்தகங்களாக அமைய வேண்டும் அல்லது நூலகங்களையே எதிர்பார்க்க வேண்டும் என்ற நிலைமை இருந்து வருகிறது. பாலுணர்ச்சில் பலவீனமுடையோரையும், மனக்கவலைக்கும், குழப்பத்துக்கும் ஆளானவரையும், மையமாக்கி விளையாடும் போலித்தன்மை கட்டுரைவட்டத்திலும் இல்லாமலில்லை. கட்டுரைகளில் இலக்கியம் பற்றிய கட்டுரைகள் மிகவும் குறைவாகவே வருகின்றன. வெளிநாட்டு அனுபவங்கள் பற்றியும் கோயில்கள் பற்றியும் அடிக்கடிக் கட்டுரைகளை பார்க்கும் வாய்ப்பு இருக்கிறது.

சமுதாயத்திலுள்ள சிக்கல்களை நன்கு ஆய்ந்து மக்களுக்கு எடுத்துக்காட்டும் வகையிலான கட்டுரைகளைச் சில பத்திரிகைகளின் தலையங்கங்களில் மட்டுமே காண இயல்கிறது. சமுதாய சூழல்களைப் பற்றியும், சிக்கல்களைத் தீர்ப்பது பற்றியும் எழுத்தாளர்கள் எவ்வளவு தூரம் சிந்திக்கிருர்களோ அவளவுக்கு அவர்கள் இனமே அதனுல் நன்மை பெறும். இதைவிட்டு பொய்ம்மையையும் போலியையும் கட்டிக்காப்பதால் யாருக்கும் எந்த நன்மையும் ஏற்படப் போவதில்லை.

கட்டுரைகளில் தரமானவற்றை உணர்ந்து போற்றும் உள்ளங்களும் இல்லாமல் இல்லை. இத்தகைய உள்ளமுடையோர்களை நன்கு படித்துத்தம்மால் இயன்ற அளவு சிந்திக்கவும், சிறந்த கட்டுரைகளைத் தொகுத்துச் சேர்த்து வைப்பதிலும், ஆர்வம் காட்டுகிருர்கள். இந்த நல்ல வாய்ப்பினைப் பயன்படுத்திக் கட்டுரையாளர்கள் உண்மைக்குகந்த படைப்புகளைச் சிறந்தமுறையில் வெளிக்கொணர்ந்தால் கட்டுரை வட்டத்துக்கே நன்மை பயக்கும்.

**இலக்கிய வளர்ச்சிக்குத் தடைகள்:**

எந்த ஒரு குழுவும் தன் செயலில் வெற்றிக்காண வேண்டுமானுல் அக்குழுவினுள் உட்பூசல் இல்லாமல் காக்கப்பட வேண்டும். எழுத்துலகில் ஒருவரையொருவர் மதியாமையும் சிறப்பினைக் காணும்போது பாராட்டுகிற மனப்பக்குவமின்மையும் ஒரு கொடிய நோயாக இருக்கிறது. எழுத்துலகில் பல்வேறு குழுக்கள் இருப்பதையும், இந்தக் குழுக்கள் ஒன்றையொன்று மதியாமல் இருப்பதையும், சமயம் வாய்த்தால் தாக்குதல் நடத்திக் கொள்வதையும் ரசிகர்கள் வட்டம் கவனிக்காமல் இருப்பதில்லை. இங்ஙனம் எழுகின்ற மனச்சிறுமைகள் மறைமுகமாக எழுத்துலகப் படைப்புக்களையே கீழ்நிலைக்குக் கொண்டு வருகின்றன.

ரசிகர்களில் ஒருசாரார் எழுத்துலகப் படைப்புகளை உரிய பொறுப்புடன் நோக்காமல் பொழுதுபோக்குபோல நோக்கித்

தமது பல்வேறு மனநிலைக்கேற்ப வாய்க்கு வந்ததைச் சொல்லி அதையே பரவவும் விடுகிருர்கள். இதனுல் படைப்பின் உண்மையான தரத்தைப் பற்றி ஒரு சிறு குழப்பமே நேர்கிறது.

வாசகர்களில் மிகச்சிலரே தாம் சுவைத்தவற்றை வாங்கித் தொகுத்துக் காக்கும் வழக்கத்தை மேற்கொண்டுள்ளார்கள். உயர்நிலைப் பள்ளியில் பயிலும் பிள்ளைகள் முதல் பட்டதாரிகள் வரை நூல்களைத் தொகுத்துக்காக்கும் வழக்கம் இல்லாதவர்களே பெரும்பாலோராக உள்ளனர்.

வாசகர்கள் மனம் வளரவில்லையானுல் எழுத்துலகமும் வளர இயலாது. எழுத்துலப் படைப்பாளர்கள் இரண்டுபடி முன்னே சென்ருல் ஒரு படியாவது பின் தொடரவேண்டும். வாசகர்கள் நின்ற இடத்திலேயே நின்ருல் அல்லது திசைதிரும்பிப் போக விரும்பினுல் எழுத்தாளன் விரைந்து முன் செல்வது எப்படி இயலும்? வாசகர்களுக்கும் எழுத்தாளர்கட்கும் மன அடிப்படையில் ஒரு தூய உறவு வளரவில்லையானுல் எழுத்துலகம் வளர இயலாது. எழுத்துலகம் செழிக்க எழுத்தாளனுக்கு ஊக்கம் பிறக்க எழுத்தாளனுக்கும் வாசகனுக்குமிடையே கருத்துப்பரிமாற்றம் நிகழ்ந்தாகவேண்டும்.

## பத்திரிக்கைகள்:

இன்றைய எழுத்துலகைப் பற்றிப் பேசும் போது பத்திரிக்கைகளைப் பற்றிப் பேசாமல் விட்டுவிடமுடியாது. எழுத்தாளர்களை இயன்ற அளவு வரவேற்று மக்களுக்கு அறிமுகப் படுத்தி, உயர்ந்த படைப்புகள் உருவாக உறுதுணையாக நிற்பவை பத்திரிக்கைகள். இவைகள் வாரந்தோறும் மாதந்தோறும் புற்றீசல் போலப் பெருகின்றன. முதல் இதழே இறுதி இதழாகிச் சில பத்திரிக்கைகள் வாழ்நாளை முடித்துக்கொள்கின்றன. இப்போது தமிழகப் பத்திரிக்கையாசிரியர் பலரும் தம் பத்திரிக்கையில் கதை, கவிதை, கட்டுரை யாவும் இடம் பெறவேண்டும் என்று விரும்புவதோடு ஒவ்வொரு தனி இதழிலும் அரசியல், இலக்கியம் சோதிடம், வைத்தியம், அறிவியல் ஆகிய பல்வேறு பகுதிகளையும் சேர்த்துவிடவேண்டுமென்று விரும்புகிருர்கள். ஒவ்வொரு பத்திரிக்கையாசிரியரும் பல்துறை அறிஞராக இயலாது. மக்கள் அப்படி எதிர்பார்ப்பதும் இல்லை. பத்திரிக்கையாசிரியர் பல்வேறு வகையான கலை, அறிவியற் பகுதிகளைச் சேர்க்கும் போது அவற்றின் உண்மையான தரத்தை அறியாமல் தவிப்பதிலும் சில வேளை தவறு நேர்வதிலும் வியப்பில்லை. இதனுல் மேல் மட்டத்தில் இருப்பவர் சிலர்க்குப் பத்திரிக்கைகள் மீது உயர்ந்த எண்ணம் ஏற்படாமற் போய்விடுகிறது.

பத்திரிக்கைகளை இரவல் கொடுப்பதையோ இரவல் வாங்கிப் படிப்பதையோ வாசகர்கள் சிறிதும் தவருகக் கருதுவதில்லை. மாருகச் சிலர் பெருந்தன்மையாகவும் நினைக்கிருர்கள். இந்த இரவல் பழக்கம் எழுத்துலக வளர்ச்சிக்கே ஒரு கேடு—ஒரு தடை என்பது முறையாக எண்ணிப் பார்ப்பவர்க்கு விளங்காமற் போகாது.

எழுத்தாளர்களில் ஒருசாரார் வாசகர்களிடம் (சிலரிடம்) உள்ள பலவீனத்தைப் பயன்படுத்தித் தவருன பாலுணர்ச்சிப் படைப்புக்களை உண்டாக்கி வருவதை உடனே நிறுத்தவேண்டும். எழுத்தாளர் இனத்தின் ஒரு பகுதி செய்யும் இந்தக் குற்றத்துக்கு எழுத்துலகம் தண்டனை அனுபவிக்கிறது. இன்னும் இந்தக் குற்றமும் தண்டனையும் எவ்வளவு காலம் தொடருமோ தெரியவில்லை.



# வள்ளுவரும் வாசுகியும்!

வள்ளுவர் பற்றிய வாய்மொழிக் கதைகள் பல உலவிவருகின்றன. அவற்றுள் இதுவும் ஒன்று! வள்ளுவர் சாப்பாட்டிற்காக அமர்ந்தவுடன் வாழை இலை விரிப்பதற்கு முன்பே, பக்கத்தில் ஒரு தம்ளரில் தண்ணீரும், ஊசியும் வைக்கப்பட வேண்டுமாம். ஆனால் வள்ளுவரின் மனைவி வாசுகிக்கு அந்தத் தண்ணீரும் ஊசியும் எதற்கென்றே விளங்கவில்லை விளக்கிக் கொள்ளவும் முயலவில்லை; என்றாவது ஒரு நாள் தெரியத்தான் போகிறது, என்று சும்மா இருந்துவிட்டாள்.

கடைசியாக, வள்ளுவரின் மரணப்படுக்கையின் போதுகூட, வெளிப்படையாக வாய்விட்டுக் கேட்கவில்லை. இது நாள் வரையில்லாத ஆர்வமும், தெரிந்துவிடவேண்டும் என்ற துடிப்பும் எழுவது இயல்புதானே! நளினமாகப் பேசினாள்; அந்த நளினத்தை ரசித்த வள்ளுவர், வாசுகி, அந்த ஊசி, தண்ணீர் மர்மத்தைதானே கேட்க நினைக்கிறாய்?......... நீ அமுது படைக்கும்போது, கைத்தவறி பருக்கை சிந்திவிட்டால் பொறுக்குவதற்காக ஊசியும், அதை கழுவுதற்காக தண்ணீரும் வைக்கச் சொன்னேன். ஆனால் நல்லூழ் காரணமாக நீயும் தவறவில்லை; நானும் தவற விடவில்லை, என்றாராம்! என்னே இருமனம் ஒன்றிய இல்லறம்!

வழிவழியாகச் சொல்லக் கேட்டவர்,
**சீனி அருணாசலம்.**

# முத்துக் குமிழ்கள்

— மதி —

*தேவி!*
*உன்னை*
*நினைத்துக் கொள்ளும் பொழுது...*
*என்*
*இருண்ட வீட்டில்*
*வெளிச்சம் உண்டாகிறது...*
*மறு வினாடியே...*
*விறகு மெத்தையில்*
*தாயைக் கிடத்தி*
*மகன் கொளுத்திய*
*மயான தீபமாய்...*
*அது*
*விஸ்வரூப மெடுக்கிற போது...*
*என்*
*அனைத்துத் தன்மை*
*என்னை*
*மயான காண்டத்து*
*அரிச்சந்திரனாக்குகிறது!*
*என் பேனா*
*உன் கழுத்தைப் பிளக்கும்*
*கொடுவாளாய்ப்*
*உயர்கிறது...*
*உன் கழுத்தை*
*அது பிளக்காது என்பது*
*சத்தியம் தான்...*
*ஆனாலும்...*
*அது மாலையாகாது என்பது*
*சத்தியம் தானே!*
*நீ*
*கொடுத்து வைக்காத*
*சந்திரமதி!*
*நான்*
*வஞ்சிக்கப்பட்ட*
*அரிச்சந்திரன்!*
*நம் காதல்*
*அருகம்புல் பறிக்கப்போன*
*லோகிதாசன்!*

(தமிழ் மலர்ச்சி பிப்ரவரி 1979)

'தமிழ் மலர்ச்சி'யின்,

ஐந்தாவது உலகத் தமிழ் ஆராய்ச்சி மாநாட்டுச்

சிறப்பு மலருக்கு

எமது நல்வாழ்த்துக்கள்!





# GLIMPSES OF THE TAMIL CULTURE

Dr. K. D. Thirunavukkarasu,
Associate Professor,
International Institute of
Tamil Studies, Madras.

Culture has been defined as the pursuit of perfection which is the embodiment of sweetness and light. It reveals the various stages in the "development of an individual, or a group, or class, or of a whole society".

Tamil Culture, which is one of the ancient cultures of the world, discloses some of the significant features of the human mind and its longings for the liberation of mankind from the trammels of death and destruction. Ancient Tamils have made successful attempts to achieve perfection in every walk of life, which can be easily discerned from their literature, art and architecture.

## Tamil Language

Tamil is the language spoken in the eastern and southern parts of the peninsular India by 50 million people. About ten million people speak Tamil language in Ceylon, Burma, Malaya, Singapore, Mauritius and South Africa.

Sahitya Akademi has recogni-

sed twenty languages of India as Modern Indian languages. Among them Tamil is the ancient language which has a history of three thousand years. It has been acclaimed as one of the classical languages. The Tamil people is known to the world as the "Greeks of Tropical Region".

### Hospitality

The Tamils are well-known for their love and affection for their brethren. From the dawn of history, the Tamils have freely associated with the foreigners of far and near and have developed a sense of service towards them, which has been called in Tamil as *Viruntu Ompal*, i.e., hospitality. Even today, they practise hospitality as a kind of virtue or an aspect of righteous living. *Tiruvalluvar*, the great poet and philosopher of Tamil Nadu, pays tributes to the act of hospitality in the following terms :

> "What far the wise toil and set up homes? It is to feed the guest and help the pilgrim" (Kural 81)

### Radical Humanism

Very often, Indians are accused by the Westerners as "dreamy idealists who never care for the material well-being in this world and call it as maya (illusion)" But some of them have admitted that the people of the Tamil country are only exception to this. According to Dr. Albert Schweeiter, that the "Tamil People heve a great fascination for the life in this world and they did not encourage 'the life negation theory' of Hinduism." The philosophy of life propounded by the ancient Tamils has been called as a "moral philosophy based on radical humanism."

### Bhakti Cult

In the religious sphere, the Tamils are the pioneers of the Bhakti Movement in India. From the middle of the 5th Century A. D. to the end of 9th Century, the great Saiva and the Vaishnava saints of Tamilnadu poured forth their spirtual experience in the form of melodious devotional songs and conveyed the message of 'self surrender.' By their spontaneous out-pourings, they gave *form* and *shape* to the Bhakti Movement which slowly spread to North India in the subsequent centuries.

### Music and Dance

In the field of Fine Arts, the Tamils have Contributed their major share. The mellifluons Carnatic music and the fascinating Bharata Natya which have earned a name and fame as the 'Classical Indian music and dance' in the Western hemisphere, have origi-

nated in the Tamil Country.

### Architecture

Temple architecture has been developed in a wonderful way. The amazing temples of Tamilnadu have arrested the minds and thoughts of the Westerners. The 'Great Temple' at Tanjavur has been Called the 'touch-stone of Dravidan wisdom.' The innumerable temple towers at Madurai, Sri Villiputtur, Tiruvannamalai and Kanchipuram are well-known for their artistic-beauty and charming sculptural representations.

### Sculptures

The sculptural panels at Mamallapuram reveal the genius of the Tamils in transforming the rocks into graceful figures of men and animals. The sculptures of the Chola and the Nayak rulers of Tamilnadu deserve special mention here.

### Bronzes

The Chola bronzes, which are the images of gods, goddesses and saints made out of the alloy of five metals are the fine specimens of the high-standard achieved by the Tamil people in the art of bronze-making.

Nataraja, 'the Dancing Siva' bronzes, is the master piece of the bronzes made in Tamilnadu, which is the fountain of aesthetic and spiritual experience. The Tamil artisans specially delighted in portraying the god as a graceful young man, his four arms are delicately posed, with a flame in the open palm of one hand and a halo of flames encircling him, one foot firm on the back of a demon and the other raised in a posture well-known is the Bharata-Natya. Thus the god appears as the very essence of vital, ordered movement, eternal youth and light.

Dr. Ananda K. Coomaraswamy has interpreted the mystic symbolism of Nataraja in the modern philosophical peaspective. He observes that "To the Dravidian imagination, Siva's dance, the Nadana is the personification of all the forces and powers of the cosmic system in operation, the movement of energy within the Universe. In him they have their day spring and in him their death. This plastic type more than any other, expreses the untiy of human consciousness, for it represents equally religion, science and art. This unity has illumined the inauguration of the philosophers of many races, but the Indian Nataraja may well be claimed as the clearest, most logical and impassioned statement of the conception of life as an Ethereal Becoming".

**Bard of Universal Man**

The moral philosophy of the Tamils is enshrined in *Tirukkural* the great classic in Tamil. It is "the masterpiece of Tamil literature and one of the highest and purest expressions of human thought''. This great didactic work in Tamil reveals the "loftiest sentiments and the purest philosophy of life with equal power of conception and expression of the Tamil genius".

The author of this work is the sage *Tiruvalluvar,* who might have lived in the second century A D, He has been called the "Bard of Universal Men'' by Dr. G. V. Pope a great missionary of England.

**The Ideal of One-World**

The supreme philosophy of life as conceived by the Tamil is clearly expressed in one of the verses of *Purananuru*, the ancient Tamil Classic.

> Every contry is my contry!
> Every man is my kinsman!
>
> (Puram 192)

In these lines, the ancient Tamils have given vibrant expres sion to their cherished ideal of the "ONE WORLD'' and the "Universal Brotherhood of Man" Firm this oft-quoted epigram, one can understand that the Tamils have gone beyond the barriers of class, community, nation and religion and embraced the whole humanity as their brothren. This lofty-ideal pronunces the idea of humanity as a single race, beings with a common life and a common general interest, which sounds like the most characterstic and significant saying of Indian thought.

**BIO-DATA**

| | | | |
|---|---|---|---|
| 1. | Name | : | K. D. THIRUNAVUKKARASU |
| 2. | Age & Date of Birth | : | 49 years : 20th November 1931 |
| 3. | Educational Qualifications | : | (1) M.A. Tamil 1954 Madras University.<br>(2) M.A. Hist. 1956 ,,<br>(3) M. Litt. 1962 Annamalai University.<br>(4) Dip. in Lings 1962 ,,<br>(5) PH.D. 1979 Madras University. |
| 4. | Present Position and the Institution in which employed | : | Associate Professor, International Institute of Tamil Studies, Adyar, Madras. |
| 5. | Pen Name | : | 'கலைச்செல்வி' (KALAICCELVI) |
| 6. | Titles and Awards | : | திருக்குறள்மணி (TIRUKKURALMANI)<br>Sahitya Akademy Award in 1974 for the work "திருக்குறள் நீதி இலக்கியம்'' (Tirukkural : A Didactic Work) published by the University of Madras in 1971. |

# 'சிந்துச் சமவெளி' உண்மைகளுக்கு ஓர் அதிரடி!

சோவியத் மொழியியல் அறிஞர்களே, புகழ் பெற்ற சிந்துவெளி நாகரிக எழுத்துப் பிரதிகளை அலசி ஆராய்ந்த தகைமையுடைய ராவார்கள். இதன் மூலம் உலத்தின் மிகப் பழமையானதும், மறைக்கப் பட்டதுமான நாகரிகத்தின் ரகசியங்களை அம்பலப் படுத்தி யிருக்கிறர்கள்

இஸ்வெஸ்டியா (Izvestia) பத்திரிக்கையில் வெளியான அந்த மொழியியலறிஞர்களின் கண்டுபிடிப்புகள், சிந்துவெளி நாகரிகம் இந்திய துணைக்கண்டத்தைச் சேர்ந்தவர்களுக்கே சொந்தமானது என்றும், ஆக்ரமிப்பாளர்களின் மூலம் கொண்டுவரப்படவில்லையென்றும் கூறுகிறது. அதுமேலும், நாகரிகம் ஒரேயிடத்திலிருந்துதான் பரவியது என்பதைவிட, வெவ்வேறு இடங்களில் தனித்தனியே வளர்ந்திருக்கின்றன என்ற 'பரவு கொள்கை'க்கு (diffusion theory) ஆதாரங்களை வழங்குகிறது.

சிந்துச் சமவெளி நாகரிகச் சான்றுகள், இரண்டு யுத்தங்களுக்கு இடைப்பட்டக் காலத்தில் ஆங்கிலேய புதைப்பொருள் ஆராய்ச்சியாளர்களால் (archaeologists) கண்டுபிடிக்கப்பட்டன. அதுவரையிலும் கி. மு. 1500 ஆண்டுகளுக்கு முன் இந்தியாவை ஆக்ரமித்த இந்தோ ஐரோப்பிய ஆரிய நாடோடிகளே பூர்வீகக் குடிகளென கொள்ளப்பட்டனர்.

25 வருடகால அகழ்ந்தெடுப்பும் — ஆய்வும், 2000 வருடகால பழமையை இந்திய நாகரிகத்திற்கு தந்திருக்கிறது. அதுவே கீழை நாட்டு பழமையான நாகரிகமென்று ஒப்புக் கொள்ளப்பட்ட உண்மையை மாற்றியமைத்திருக்கிறது. ஆனல் இந்த மக்கள் எங்கிருந்து வந்தவர்கள்?

'மத்திய கிழக்கு—சுமேரியன் நாகரிகத்துடன் சம காலத்தான சிந்துவெளி நாகரிகமென அறியப்படும் ஹரப்பா கலாச்சாரம், கி மு. 2500 க்கு பிந்தி எழுந்ததாக யிருக்க முடியாது என்று புதைப்பொருள் ஆராய்ச்சியாளர்கள் குறிப்பாக சர். மார்ட்டிமர் வீலர் (Sir. Martimer Wheeler) ஒத்துக் கொள்கிறார்.

புதைப் பொருள் அகழ்ந்தெடுப்பினல், பஞ்சாபின் ஹரப்பா, சிந்துவின் மொகஞ்சோதரா, இன்னும் லோத்தல், மற்றும் சின்ன

ஊர்களும், நகர்களும் வெளிவந்துள்ளன. இப்பொழுது டெல்லியிலிருந்து பம்பாய்வரை யிலான 840,000 சதுரமைல் பரப்பளவில், ஹரப்பா நாகரிகமிருந்ததாக மதிப்பிடப் படுகிறது.

தண்ணீர் வசதி, பொதுக் குளிப்பிடத் துடன் கூடியதும், சுத்தமான, சதுரமான தெருக்களையுடையதுமான நகரங்களை அந்த மக்கள் அமைத்திருந்தனர். அவர்களுடைய பரந்த வீடுகள் சுட்ட செங்கல்லால் கட்டப்பட் டவைகள். உயர்ந்த உலோகத்தாலான நகைகளையும் வைத்திருந்தனர்.

அந்த அருமையான நாகரிகம், திறமை யான வேளாண்மையின் அடிப்படையிலா னது; தவிரவும் அவர்கள், எருது, காளை, ஆடு, பன்றி, நாய், ஒட்டகம், யானை இவை களையும் பழக்கியிருந்தனர் தற்கால ஆப்கா னிஸ்தானத்திலிருந்து வந்த ஆரியர்கள்அவை களை அழித்துவிட்டார்கள் என்பதே வீலரைப் பொறுத்தவரையிலான கருத்தாகும்.

1922-27ல் மொகஞ்சோதராவை அகழ்ந் தெடுந்த சர் ஜான் மார்ஷல் (Sir John Marshall), ஹரப்பா மக்கள், தெற்கு ஆசியா அல்லது ஐரோப்பாவிலுள்ள நீளமான தலை யையுடைய இனத்தைச்சேர்ந்தவர்கள் என்று நம்பினர். அவருடைய இந்தக் கருத்துக்கு சில எலும்புக் கூடுகளை ஆதாரமாகக் கொண் டார். ஆனால், மொழியொன்றே, அவர்க ளுடைய தோற்றத்துக்கான உண்மையான தடயமாகும்.

ஒருவேளை, சுமேரியர்களின் 'ப' வடிவ எழுத்துக்களுடனும், (Cunei form), எகிப்தி யர்களின் சித்திர எழுத்துக்களுடனும் (heiroglyphics) எந்தச் சாயலுமில்லாத தனித்துவ எழுத்துப் பிரதிகளின் கண்டுபிடிப்பு கூட பெரிய சாதனையாகலாம். ஹரப்பா எழுத்துக் பிரதிகள், சிந்துவில் 800 உலோகத் துண்டு களிலும், பாபிலோனிய - சுமேரியர்களின் மெசப்பொட்டோனிய சமவெளியில் கண்டெ டுக்கப்பட்ட கப்பலின் உறுப்பொன்றிலும் காணப்பட்டன இதிலிருந்து சிந்து சமவெளி மக்களுடன் சுமேரியர்கள் வாணிபத் தொடர்பு இருந்தமை விளங்குகிறது.

இந்த எழுத்துக்கள் வலப்பக்கமிருந்து இடமாகவும், இரண்டாவது வரியிருப்பின் அந்த வரியில் எழுத்துக்கள், இடமிருந்து வலமாகவும் எழுதப்பட்டிருக்கும். இதுவரை யிலும் அந்த கண்டுபிடிப்பில் துப்பு துலக்க வும், விளக்கவுமான எல்லா முயற்சிகளும் மேற்கொண்டபோதிலும், அது வெற்றிபெற வில்லை. இருந்தும்கூட, *ஹங்கேரியின் மொழி நூலறிஞர் ஜி. டி. ஹெவிசி* (G. DE. HEVESY) *இந்தப் பிரதிகளுக்கும், கிழக்கிந்திய தீவிலுள்ள எழுத்துக்களுக்குமிடையில் குறிப்பிடத் தகுந்த சாயல் இருப்பதைச் சுட்டிக் காட்டியிருக்கிறார்.*

சோவியத் மொழியியலறிஞர் யூரி நொ ரொசௌ (Yoriy Knorozov) 15 வருட கால ஆராய்ச்சியில் மத்திய அமெரிக்காவின் 'மாயா' எழுத்துப் பிரதியில் ரகசியங்களைக் கொணர்ந்தபின், தன்னுடைய கவனத்தை சிந்துவெளி எழுத்துப் பிரதியின்பால் செலுத் தினார். சோவியத் உலக மக்களின் ஆய்வு நிறுவனத்தின் (Soviet Institue of Ethnography) குழுஒன்றின் உதவியோடும், கம்யூட்டரின் துணையோடும், யூரிநொரொ சௌவும் அவருடைய துணைவர்களும், சில வார்த்தைகளும் குறிகளும் ஐயப்பாட்டுக்கு இடமளிப்பினும் கூட, தற்பொழுது நிலவும் பாடங்களை வாசிக்க முடியுமென்னும் தகைமை யடைகிறார்கள்.

'ஆய்வு' என்பது ஒருவர்க்கு கற்பிப்ப தைப் போன்றது என்கிறார் பேராசியர் யூரி. ரொரொசௌ. 'முதலாவது ஒருவர் ஒருசில எழுத்துக்களை அங்கீகரிக்கவும், அகர வரிசை யின் தன்மையையும் அறிகிறார். மொத்த மாக ஒரு பொதுக் கருத்து உருவாகும்வரை அவைகளை வேறுபடுத்தி பார்க்கவேண்டும். அதுவே 'ஊடுறுவல்' (break through) எனப்படும். ஆனால் அதற்குமேலும் கூட விளங்காத வார்த்தைக்கு வார்த்தைகளை அலச வேண்டி வரும். என்கிறார் அந்தப் பேராசிரியர்.

'மாயா' எழுத்துப்பிரதிகளுடன் நொரொசௌக்கான தொல்லைகூட கருவிக்

குறைவேயாகும். வறண்ட வெட்பதட்ப முடைய எகிப்துக்கு மாருக, மத்திய அமெரிக்க மாயா நாட்டிலும், இந்தியாவிலும், அட்ச தீர்க்க ரேகைகட்குட்பட்ட பகுதியாகையால், மழையும் காற்றுமாகவே இருக்கும். அதனுல் 'மாயா' எழுத்துப்பிரதிகள் அதிகம் கிடைத் தாலுங்கூட சிலதான் நேர்த்தியாகயிருந்தன.

'சிந்துச்சமவெளி மக்கள் பலை ஓலை களிலும், உலோகம் பலசைகளிலூங் கூட எழுதியிருந்தவை காணப்பட்டன; எழுதுங் கருவிகளான, எழுதுகோலும், மைபாட்டிலுங் கூட கண்டெடுக்கப்பட்டன' என்று நொரொசௌவும் அவரின் துணைவர்களும் உறுதியாக கூறுகிருர்கள்.

'புதைபொருள் ஆய்வாளர்கள், வருங் காலங்களில் குகைகளில் பாதுகாக்கப்பட்ட பாடங்களைக்கூட கண்டுபிடிக்கலாம். ஆனுல் இப்போதைக்கு நாங்கள் ஆய்வது கல்லில் செதுக்கப்பட்ட எழுத்துக்களே – அதுவும் சிதைந்தவைகளையே! என்கிருர் அவர்.

உண்மையிலே இந்த எழுத்துப் பிரதிகள், ஆலயத்துக்கு வரும் பக்தர்களின் பாத்திரங் களிலும், பக்தர்களுக்கு கொடுக்கப்படும் சாமியார்களின் சன்மானப் பொருள்களிலுமே காணப்படுகின்றன.

நொரொசௌ, முதலாவதாக அந்த எழுத்துப் பிரதிகளில் கடவுளின் பெயரும், குறிப்பிட்ட காணிக்கை செலுத்தவேண்டிய தேதியின் சூத்திரக் குறிப்பும் இருந்ததாக நிலைநாட்டினுர். அந்தத் தேதி சூத்திரம் அல்லது நாட்குறிப்பானது ஆடு, புலி, எருது என்பனவற்றில் அடையாளமாகயிருந்து வரு டத்தின் ஆறு பருவ காலங்களைக் குறித்தன.

இதிலிருத்து நொரொசௌவும் துணைவர் களும், சூரிய் சந்திரனை அடிப்படையாக வைத்து சிறந்த தேதிக் குறிப்புக்களை வான நூல் ஞானிகள் வைத்திருந்தனரென்றும் அரிய உண்மையைக் கண்டுபிடித்தனர். அவர்கள் மேலும் 5, 12, 60, வருட சூரிய, சந்திர, வியாழச் சுழற்சியையும் கணக்கிட் டிருந்தனர். கி. மு. மூவாயிரம் ஆண்டுகள் அளவில் சிந்துவெளி மக்கள் ஐந்து பெரிய கிரகங்களையும், வியாழன் சூரியனைச் சுற்றி வரும் கால அளவையும் அறிந்திருந்தனர். பழமையான இந்தியா, தத்துவங்களையும், வான நூல் அறிஞர்களையும், கணக்காயர் களையும் வைத்திருந்தது என்ற பெருமை ஆச்சரியமளிக்கிறது.

ஆனுல் சோவியத் மொழியிலறிஞரின் ஆதாரபூர்வமான கண்டுபிடுப்பு என்னவென் றுல், சிந்துவெளி மக்கள் தமிழ், மலையாளம், கன்னடம் ஆகிய தென்னிந்திய மொழிகளின் ஆதியான திராவிட மொழியையே எழுதி வந்தனரென்பதாகும். அந்த எழுத்துப் பிரதி கள் மேற்படி எழுத்துக்கள் இந்த நாட்டிற்கே சொந்தமானது யென்றும், ஆரிய ஆக்ரமிப் பாளர்கள் பெரிய நாகரிகத்தை கொண்டு வரும் முன், ஓர் அரிய, நிலைத்த நாகரிகத்தைக் குலைத்துவிட்டனர் என்றும் நிரூபிக்கின்றன.

நன்றி :
Izestia, Jan. 30, 1980.



## ஜப்பானில் வேலை நிறுத்தம்!

*ஜப்பானில் தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்தில் ஈடுபடும்போதுங் கூட, தங்களின் வேலைகளை முடித்து விட்டு வேலை நிறுத்தத்தின் அடை யாளமாக, தங்கள் கைகளில் கறுப்புச் சின்னத்தை அணிந்து கொள்கிருர் கள். பிறகு எப்படி குட்டி நாடான ஜப்பானை தொழில் வளர்ச்சியில் மற்ற நாடுகள் எட்டிப்பிடிக்க முடி யும்? ஜப்பானின் தொழில் வளர்ச்சி என்ருல் அதன் அருமுயற்சிதான் காரணம்!*



# இன்னுமொரு பண்பாடு!




**V. A. வாசுதேவ ராஜு**
*இயக்குநர்,*
*திட்டம் & ஆராய்ச்சித் துறை,*
*புதுவை அரசு.*


நான், 1979ம் ஆண்டு குளிர் காலத்தில் 'கொழும்புத் திட்டத்தின் கீழ், இங்கிலாந்தி லுள்ள பிராட் போர்டு பல்கலைக் கழகத்தில் மூன்று மாதங்கள் 'திட்டமிடுவது' குறித்து, பயிற்சி பெறும் வாய்ப்பினைப் பெற்றேன். அங்கு, நான் தங்கியிருந்த மூன்று மாதங்களும் கடுமையான பனி பெய்த குளிர் காலமாகும். கடந்த 30 ஆண்டு களில் அதுபோல் பனி பெய்தது கிடை யாது என்று அந்நாட்டவர்கள் கூறியது கேட்டு, வியப்படைந்தேன். பனியினால் ஏற் பட்ட தொல்லைகளை கவனிப்பதற்காக இங்கி லாந்து அமைச்சரவையில் பனி அமைச்சர் (Snow Minister) என்று தனி அமைச்சர் பதவி ஏற்படுத்தப்பட்ட தென்றால் பாருங் களேன். எங்கு நோக்கினும் முழங்கால் வரையிலும் உறைபனி கடற்கரை மணல் போல் பரவிக்கிடந்தது. எல்லோரும் எப் போதும் யாரைப் பார்த்தாலும் பனியின் கொடுமை குறித்து பேசுவதுதான் இயல்பாக இருந்தது. இச்சூழ்நிலையில் நான் அந்நாட்டு மக்கள் பலரை சந்தித்து அவர்களின் வாழ்க் கையைப்பற்றியும் மனோ பாவத்தை பற்றியும் தெரிந்துகொள்ள முயற்சித்தேன்.

நான் சந்தித்தவர்களில் ஒருவர் பிராட் போர்ட் பல்கலைக் கழகத்தின் 'அமைதியியல்' துறையின் தலைமைப் பேராசிரியர் திரு ஓகா னெல். இரண்டு ஆண்டுகள் கடந்தும் கூட என்னால் அவரை மறக்க முடியவில்லை. பேரா சிரியர் ஓகானெல், உண்மையை அறிந்து சரியான தீர்வுகளை எடுத்துச் சொல்லக்கூடிய அறிவும் ஆற்றலுங் கொண்டவர். நைஜீரியா நாட்டில் பல ஆண்டுகள் தங்கியிருந்து

கொள்கைகளை வகுப்பதற்கு அந்நாட்டு அரசுக்கு பேருதவி புரிந்திருக்கிறார். தனக்கு தெரிந்தது சில; தெரியாதது பல என்று எண்ணுபவர்; அடக்கமே உருவானவர். அவர் பயிற்சி நிலையத்தில் ஆற்றிய உரையில் பல கருத்துக்கள், பலரும் கூருதவைகளாக இருந்தன. எனவே அவரை மீண்டும் சந்திக்க விரும்பி கடிதம் எழுதினேன். பேராசிரியர் ஓகானெல் ஒருநாள் விருந்துக்கு வரும்படி எனக்கு அழைப்பு அனுப்பினார்.

அவரை சந்திக்கும் வாய்ப்பினைப் பயன்படுத்தி உணவின் சுவையுடன், சுவையான கருத்துக்களையும் பரிமாறிக் கொள்ளலாம், என்று எதிர்பார்த்தேன். உணவு பரிமாறுவதற்கு சில நிமிட இடைவெளி இருந்தது. அப்போதும் பேராசிரியர் ஓகானெல் தான் வந்து சேரவில்லை. பின்னர் வந்துசேர்ந்தவுடன் சிறிது நேரமே தாமதமானபோதுங் கூட தனது தாமதம் குறித்தும், தானும் தன் மனைவியும் ஒரு முக்கிய பிரச்சனை குறித்து முடிவு எடுக்க வேண்டியதில் சிக்கலேற்பட்டதை தொடர்ந்து தாமதம் ஏற்பட்டதாகவும் கூறி தாமதத்திற்காக வருத்தம் தெரிவித்துக் கொண்டார். முக்கியமான பிரச்சனை இருக்கும்போது இந்த விருந்து நிகழ்ச்சியை வேறொரு நாளுக்கு தள்ளி போட்டிருக்க வேண்டியதுதானே என்று நான் குறிப்பிட்டேன். அப்படியொன்றும் பெரிய பிரச்சனை இல்லை என்றார் பேராசிரியர் ஓகானெல். அந்தப் பிரச்சனை என்ன என்பதை அவருக்கு ஆட்சேபனை இல்லை என்றால், நானும் தெரிந்துகொள்ளலாமா என்று வினவினேன். அவர் கூறிய விவரங்கள் என்னை மகிழ்ச்சி அடையச் செய்தன.

அன்று பேராசியர் ஓகானெலும் அவரது மனைவியும் அவர்கள் தத்து எடுக்க வேண்டிய குழந்தையைப்பற்றி முடிவு எடுக்க வேண்டிய பிரச்சனை ஏற்பட்டதாம். அவர் வசிக்கும் பகுதியிலுள்ள சமுதாய ஊழியர் ஒருவர் பல குழந்தைகளின் விபரங்களையும், புகைப்படங்களையும் ஓகானெல் தம்பதிக்கு காட்டினாராம். ஒவ்வொரு குழந்தையின் விபரங்களையும் இருவரும் சேர்ந்து ஆய்வு செய்து தேர்ந்தெடுக்க அதிக நேரம் ஆயிற்று என்று குறிப்பிட்டார். நல்ல எண்ணமும், தூய மனப்போக்கும், அறிவும் கொண்ட பேராசிரியருக்கு மக்கட் செல்வம் இல்லையே என்ற வருத்தத்துடன் சில விநாடிகளை கழித்தேன். எதற்கும் கேட்டுத் கொள்ளலாமே என்று விரும்பி, தாங்கள் குறிப்பிட்ட இந்த பிரச்சனை குறித்து, நான் ஒருசில கேள்விகளை கேட்கலாமா' என்று உரையாடலைத் துவக்கினேன். எந்தக் கேள்வியை வேண்டுமானாலும் தாராளமாகக் கேளுங்கள் என்று பேராசிரியர் பதிலளித்தார்.

'உங்களுக்கு குழந்தைகள் இல்லையா?' என்று தயக்கமுடன் கேட்டேன். அவருக்கு மூன்று குழந்தைகள் உள்ளன என்று பதிலளித்தார். தங்களுக்கு ஏற்கனவே மூன்று குழந்தைகள் உள்ளனவே, மேலும் ஒருகுழந்தையை தத்து எடுக்க வேண்டிய அவசியம் என்ன என்று கேட்டேன். அதற்கு அவர் தந்த விளக்கம் மிகவும் தெளிவானது. எங்கள் வீட்டில் மேலும் ஒரு குழந்தை தங்குவதற்கு பயன்படக்கூடிய ஒரு அறை காலியாக உள்ளது; என்னுடைய வருமானம் மேலும் ஒரு குழந்தையை வளர்த்து உருவாக்குவதற்கு போதுமானதாக உள்ளது; என்னுடைய மனைவிக்கு மேலும் ஒரு குழந்தையை கவனிப்பதற்கான நேரம் உண்டு. இந்த மூன்று வசதிகளும் உள்ளபோது, வசதியற்ற குடும்பத்தில் பிறந்த ஒரு குழந்தையை தத்து எடுத்து நன்றாக வளர்த்து உருவாக்குவது எங்களுக்கு மகிழ்ச்சி தரக்கூடிய காரியமாகும். என்று அவர் கூறினார். இவ்விஷயத்தில் முனைப்பு காட்டியது தன்னுடைய மனைவி தான் என்றும், மனைவியின் கருத்தை தான் உடனடியாக ஏற்றுக் கொண்டதையும் பேராசியர் ஓகானெல் எனக்கு விளக்கினார். இந்த விளக்கம் எனக்கு தேனாய் இனித்தது. பணக்கார நாட்டுப் பேராசிரியரின் அந்தப் பண்பினைக்கண்டு வியந்தேன். நான் அவரிடம் கொண்டிருந்த மரியாதையும் பற்றும் மேலும் பன்மடங்கு உயர்ந்தன. 'இங்கிலாந்தில் வசதியான குடும்பங்களில், குழந்தைகள் இருந்தும் தத்து எடுக்கக் கூடிய பழக்கம் உண்டு, என்று பேராசிரியர் கூறியது என்னை மேலும் மகிழ்ச்சியில் ஆழ்த்தியது, அந்த நாட்டு மக்களின் பெருந்தன்மை என்னைக் கொள்ளை கொண்டது. அவரையும் அவரு

டைய நாட்டு மக்களையும் வாயாரப் புகழ்ந்து விட்டு கொஞ்சநேரம் சிந்தனையில் ஆழ்ந்து விட்டேன். சிறிது நேரம் கழித்து என்ன நினைத்துக் கொண்டுள்ளீர்கள், ஏதோ சிந்தனையில் ஈடுபட்டுள்ளீர்களே என்று கேட்டார் பேராசிரியர் ஓகானெல். தாய் நாட்டைப் பற்றி நினைவு வந்து விட்டதாக பதில்ளித்தேன்.

குழந்தை இல்லாவிட்டாலுங் கூட, சொத்து அதிகமாக இருந்தால்தான், குழந்தையை தத்து எடுப்பது, அதுவும் சொந்தத்தில்தான் தத்துஎடுப்பது. இரண்டு குழந்தைகளை பராமரிப்பதே பெரியவேலை, அதற்குமேல் முடியாது என்று கருதும் இந்தியச் குடும்பத் தலைவிகளின் நிலைமைகளையும், பேராசிரியர் விளக்கிய இங்கிலாந்து நிலைமைகளையும் அவ்வப்போது ஒப்பிட்டு பார்ப்பதுண்டு. இரண்டு ஆண்டுகள் கடந்த பின்புங்கூட, ஓகாவெல் தம்பதியின் மனப்போக்கும், இங்கிலாந்து நாட்டு குடும்பங்களின் வழக்கமும் இத்திய நாட்டிலுள்ள தம்பதிகளிடமும் குடும்பங்களிலும் தோன்றி வளர்ந்தால் நம் நாட்டின் இலட்சக்கணக்கான ஏழைக் குழந்தைகள் புதுவாழ்வு பெறமுடியும்! அவர்களின் எதிர்காலம் ஒளிமயமானதாகவும் விளங்குமல்லவா?



## இந்திய சுதந்திரப் போராட்டத்தில் அமெரிக்க ஆயுதம்!



*இந்திய சுதந்திரப் போராட்டம் கத்தியின்றி, ரத்தமின்றி நடந்த ஒரு யுத்தமாகும். இந்த 'மகாபாரத' யுத்தத்தில் மகாத்மா காந்தி, ஒத்துழையாமை சத்தியாக்கிரகம் என்னும் நாகாஸ்திரங்களை பிரயோகித்தாரே அதெல்லாம் அவருக்கு யார் கொடுத்தது தெரியுமா? ஹென்றி டேவிட் தோரே* (Henry David Thoeau) *என்னும் அமெரிக்கர் கொடுத்தது. பாவம் அணு ஆயுதந் தான் அவர்கள் கொடுத்திருக்கிறார்களென்றால், இதுவுமா அவர்கள் கொடுக்க வேண்டும்!...............*

*ஒன்றே ஒன்று! ...... தோரே அந்த ஆயுதத்தை உருவாக்கினரே தவிர உபயோகப் படுத்தவில்லை. ஆனால் அதை உபயோகித்து வெற்றிகண்ட முதல் மனிதர் மகாத்மா காந்திதான்!*

## மாணவனிடம் ஆசிரியர் படிக்க வேண்டும்!

*அண்ணா முதல்வரான புதிதில், பாளையங்கோட்டை தூய சவேரியார் கல்லூரியில் ஒரு விழாவில் கலந்துகொண்டார். தமிழக முதல்வரை வரவேற்றுப்பேசிய கல்லூரி முதல்வர் தவத்திரு. ராசநாயகம், சே. ச. அவர்கள் கல்லூரி பாடத் திட்டத்தில் 'பாலுணர்வு'ம்* (Sex) *பாடமாக சேர்க்கப்பட வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்திப் பேசினர். அதற்கு அண்ணா பதில் அளிக்கையில், தமிழ்நாட்டு மாணவ–மாணவியருக்கு 'பாலுணர்வு' பாடத் திட்டத்தில் சேர்க்கப்பட வேண்டும் என்பதுதான் இல்லை! அவர்களோ பாலுணர்வில் ஊறியவர்கள். அப்படியே ஒருவேளை தேவைப்பட்டு, பாலுணர்வுக் கல்வியும் பாடத்திட்டத்தில் சேர்க்கப்படுமாயின், புரியாத இடங்களில் ஆசிரியர்கள் மாணவர்களிடம் விளக்கங் கேட்க வேண்டிய சூழ்நிலை நிச்சயம் உருவாகிவிடும் என்று கூறி முதல்வரை திணறடித்து விட்டார்.*



# தமிழ் இலக்கியத்தில் ஆங்கிலத்தின் பிரதிபலிப்பு!

பேராசிரியர் க. கைலாசபதி
[ யாழ்ப்பாணப் பல்கலைக் கழகம் ]

தமிழ்கூறும் நல்லுலகங்களில் ஆங்கிலேயரின் ஆட்சி நிலைநாட்டப்பட்டதைத் தொடர்ந்து நமது சமுதாயத்தின் சகல துறைகளிலும் பாரதூரமான மாற்றங்கள் ஏற்படலாயின. ஆங்கிலேயர் இந்தியாவில் நிலவும் சமயங்களுக்குத் தடையாக வெளிப்படையான நடவடிக்கைகளை எடுத்தாரல்லர். ஆயினும் அவர்களது ஆட்சிமுறை ஏனைய துறைகளைப் போலவே சமயத்துறையிலும் சீர்குலைவு, நிலை தடுமாற்றம் ஆகியன உண்டாக வழி வகுத்தது. அதுவரை சமயங்களின் வழி, வாழ்க்கையும் கலை இலக்கியங்களும் இயங்கி வந்தனவாகையால், பாரதூரமான மாற்றங்கள் ஏற்படத் தொடங்கியதும் சமயத் துறையிலேயே நெருக்கடிகளும் முரண்பாடுகளும் முனைப்பாகத் தோன்றின — வெடித்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டு, கீழைத்தேயச் சமூக இயக்கங்கள் யாவுமே சமயத் துறை பற்றி எழுந்தன. ஆனால் 'ஆன்மீக, பக்தி ரூபத்தில் அவை வெளிப்பட்ட போதிலும், அவற்றுக்கு மூலமாய் அடிப்படையாய்—தூண்டுகோலாய் மக்களின் வாழ்க்கை பற்றிய அனுதாபக் குரல்களும் எதிர்ப்புக் குரல்களுமே அமைந்திருந்தன என்பதை நாம் மறந்துவிட இயலாது.

நவீன காலம் என்பது ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தையும் பகுதியொத்திருக்கின்றது. இது முக்கியமான செய்தியாகும். முந்திய நூற்றாண்டுகளில் அரசவம்சங்கள் மாறும்பொழுது, இராசதானியிலும் அரசவையிலும் சிலபல மாற்றங்கள் நிகழுமாயினும், கீழ்மட்டத்தில், வெகு ஜனங்கள் வாழ்க்கையில், குறிப்பிடத்தக்க மாற்றங்கள் எதுவும் நிகழவில்லை. 'இராமன் ஆண்டாலென்ன? இராவணன் ஆண்டாலென்ன? என்னும் மக்கள் கூற்று, இவ்வுணர்வைப் பிரதிபலிப்பதே! உதாரணமாக, பல்லவர் ஆட்சிக் காலத்திலும் சரி, சோழர் ஆட்சியிலும் சரி, அல்லது பாண்டியர் ஆட்சியிலாயினும் சரி, தமிழ்நாட்டு மக்களின் வாழ்க்கை முறையில், அதாவது, பொருளாதாரம், சமூக அமைப்பு, நீதி பரிபாலனம், சமய நிறுவனங்கள், நடை உடை பாவனை இவற்றில் வியந்து கூறத்தக்க

மாற்றங்கள் நிகழ்ந்தன என்பதற்கில்லை. இந்நிலையிலேயே, நாளடைவில் மேல்மட்டத்தினர் மட்டுமின்றி, சாதாரண மக்களும் வெவ்வேறு வழிகளிலும்-வகைகளிலும் புதிய மாற்றங்களை உணரத் தலைப்பட்டனர்: அவற்றின் பாதிப்புக்கு ஆட்பட்டனர். சமுதாயப் பார்வை மிகப் பரந்த அளவில் உருவாகும் நிலை இயல்பாகவே இருந்தது.

அந்நியராட்சியின் பாதிப்புக்களை நோக்கி எழுந்த இப்பார்வை மூன்று வகையாகச் செயற்பட்டது. இம்மூன்று நோக்குகள் இன்று வரையில் நமது சமுதாயத்திலும் இலக்கியத்திலும் உந்து சக்திகளாக இருந்து வருகின்றன. முதலாவது: மேனாட்டு நாகரிக முறைகளையும் இலக்கிய இயக்கங்களையும் அப்படியே பின்பற்றும் போக்காகும்.

இரண்டாவது: மேனாட்டு நாகரிக முறைகள், பண்பாட்டுக் கூறுகள் என்பனவற்றை முழுமையாக நிராகரித்து, அயல் வரவற்ற – திணைப்பிறந்த அடிப்படைகளை விடாப்பிடியுடன் கைக்கொள்ளும் போக்காகும். மூன்றாவது: அந்நியராட்சியின் விளைவாக வந்து சேர்ந்த சிலபல நாகரிகக் கூறுகளையும், பண்பாட்டு அம்சங்களையும், பிறப்புரிமையான – திணைப்பிறந்த பண்பாட்டுக் கூறுகளுடன் இணைத்துச் சமரசமும் அமைதியும் காணும் போக்குகாகும். பின்பற்றல், மறுத்தல், ஒன்றிணைத்தல் என இம்மூன்று போக்குகளையும் சுருக்கமாக விவரிக்கலாம். இவையே நவீன தமிழ் இலக்கியத்தைப் பாதித்து வழி நடாத்தும் முக்கிய போக்குகள் என்பதில் எவ்வித கருத்துவேறுபாடும் கிடையாது.

சென்ற நூற்றாண்டின் நடுப்பகுதிக்குப் பின்னர் தொடங்கி இன்றுவரை, இம்மூன்று அடிப்படைப் போக்குகளுமே எத்தனையோ விகற்பங்களுடனும், வண்ண வேறுபாடுகளுடனும் இலக்கியத்தில் உருவரையறை செய்யும் காரணிகளாய் இருந்து வருகின்றன. நல்லைநகர் ஆறுமுக நாவலர், இராமலிங்க அடிகள் முதலிய சென்ற நூற்றாண்டுப் புலவர் பெருமக்களிலிருந்து, இன்றைய ''புதுக் கவிதை'' எழுத்தாளர்கள்வரை எந்த ஒரு தனிநபரையோ அல்லது இலக்கியக் குழுவினரையோ எடுத்து நோக்கினும் அவர்கள் இம்மூன்று போக்குகளில் ஒன்றையோ ஒன்றுக்கு மேற்பட்டவற்றையோ சார்ந்தவர்களாகவே இருக்கக் காணலாம்.

தமிழகத்தை மட்டுமின்றி, அனைத்திந்தியாவையே எடுத்து நோக்கிலும் இம்மூன்று போக்குகளே அடிப்படையானவையாய்த் தோன்றும். உதாரணமாக, நவீன மலையாள இலக்கிய மறுமலர்ச்சி இயக்கத்தை எடுத்து நோக்கினால், குமரன் ஆசான் (1873–1924), உள்ளூர் பரமேஸ்வர அய்யர் (1877–1949), வள்ளத்தோல் நாராயண மேனன் (1878–1958) ஆகிய மூவருமே நவீன மலையாளக் கவிதைக்கு 'வேகமும் விறுவிறுப்பும் ஊட்டியவர்கள்' இம்மூவரில், உள்ளூர் பரமேஸ்வர அய்யர் பழமையைப் போற்றிப் பேணியவராயும், தாழத்தப்பட்ட ஈழவ சமூகத்தைச் சேர்ந்த குமாரன் ஆசான் அநீதியையும் கொடுமையையும் (சாத்வீகமாக எதிர்த்துச் சீர்திருத்தம் கோரியவராயும்), வள்ளத்தோல் தேசிய இயக்கத்தில் பெரும் பங்கு கொண்டு மேலைத்தேய கலை இலக்கியங்களையும் இந்திய கலை மரபுகளையும் இணைக்க முயன்றவராயும் காணப்படுகின்றனர். வள்ளத்தோலை கேரள மக்கள் மகாகவி என்று போற்றிப் பாராட்டுவர். இம்மூவருள்ளும், குமரன் ஆசான் தமிழ்க் கவிஞர் சுப்ரமணிய பாரதியாருடன் ஒப்பு நோக்கத்தக்கவர். இருவருக்கும் பல ஒற்றுமைகள் உண்டு.

இன்னும் சொல்லப் போனால், சென்ற நூற்றாண்டின் பிற்பகுதியில் இந்தியாவில் முகிழ்த்த முக்கியமான மூன்று சமய இயக்கங்களை ஆராய்ந்தாலும் இவ்வுண்மை உறுதிப்படும். கிறித்துவ தனியொருமைக் கோட்பாடு, ஐரோப்பிய தாராளக் கொள்கை ஆங்கிலக் கல்வி முதலிய அம்சங்களினால் ஈர்க்கப்பட்டு அவற்றைப் பெருமளவிற்குப் பின்பற்றிய பிரம்ம சமாஜத்தினரை முதலாவது பிரிவினருக்குச் சிறந்த உதாரணமாய்க் காட்டலாம். பிரம்ம சமாஜம் பிற்காலத்தில் பிளவுண்டு சென்று தேய்ந்து இறந்தது என்பது உண்மையே. எனினும் அதன் முனைப்பான பின்பற்றல் பண்பு இன்றுவரை எத்தனையோ வடிவங்களில் நமது கலை இலக்கிய

உலகில் நிலவிவருகிறது.

ஒரு விதத்தில் பிரம்மசமாஜத்துக்கு எதிர் விளைவாக பிறமதக் கோட்பாடுகள் நாகரிகக் கூறுகள், பண்பாட்டுச் சின்னங்கள் ஆகிய வற்றை முற்ருக மறுத்தும், அந்நியராட்சியை உள்ளூர வெறுத்தும் தமது பாரம்பரியத்தி லுள்ள சிந்தனைகளையும் நம்பிக்கைகளையுமே பிரதானப்படுத்திப் பிரச்சாரஞ் செய்த ஆரிய சமாஜத்தினரை இரண்டாவது பிரிவினருக்குச் சிறந்த எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம். வடக்கே தோன்றிய தயானந்த சரஸ்வதி யிலிருந்து இலங்கை நல்லூர் ஆறுமுக நாவலர் வரை மீட்டுயிர்ப்புக் குரல் (Revivalist) எழுப்பிய அனைவரும் இப்பிரிவில் அடங்குவர். சபாபதி நாவலரிலிருந்து இன்றைய நவ தொல்காப்பியவாதிகள் வரை இத்தகைய மீட்டெழுச்சிக் குரலையே இலக்கியத்தில் ஒலிப்பர்.

இவ்விரு இருமுனைப் போக்குகளுக்குச் சிறிது வேறுபட்ட முறையில் எதிலும் காணப் படும் விழுமிய அம்சங்களைத் திரட்டி, ஒன்றிணைப்பினை உன்னதமான வாழ்க்கைத் தத்துவமாகவும், சமய நெறியாகவும், உருவாக்கிய இராமகிருஷ்ண மடாலயத் தினரை மூன்ருவது பிரிவினருக்குத் தகுந்த எடுத்துக்காட்டாய்க் கருதலாம். இம் மூன்று போக்குகளும், முறையே, ராஜா ராம் மோகன்ராய், தயானந்த சரஸ்வதி, ராமகிருஷ்ண பரமஹம்ஸர் ஆகிய மூவ ராலும் சிறப்பாகச் சமயத்துறையில் தோற்றுவிக்கப்பட்டனவாயினும், பின்பற் றல், மறுத்தல், ஒன்றிணைத்தல் என்னும் பண்புகள் சகல துறைகளுக்கும் பொருந்து வனவாய் உள்ளன.

இம்மூன்று போக்குகளும் வேறுபடுத்திக் கூறத்தக்கனவாய் இருப்பினும் நடைமுறை யில், பல இலக்கிய கர்த்தர்களின் படைப்புக் களில் இப்பண்புகள் விரவிக் காணப்படுவதும் உண்டு. அதுமட்டுமன்று; இம்மூன்று பண்பு களில் ஒன்றை மட்டும் சார்ந்து பற்றிக்கொள் ளும் எழுத்தாளர்கள் நமது யுகத்தின் ஆற்றல் மிக்க எழுத்தாளராய் அமைந்ததுமில்லை. மீட்டுயிர்ப்புக் கொள்கையை நாவலர் பின் பற்றினர். தமிழோடு சைவமும் சேர்ந்தே செழித்து வளருதல் வேண்டும் என நம்பினர்: பிரசித்திபெற்ற பிறசமயக் கோளரியாயும் விளங்கினர். அந்த வகையில் தயானந்த சரஸ்வதியை நிகர்த்தவர் நாவலர் ஆயினும் தனது சொந்த மதத்திலும் சமயச் சடங்கு களிலும் காணப்பட்ட பல பண்புக்கேடுகளை யும் சீர்கேடுகளையும் நீக்கியே புத்துயிரூட்டும் பணியை நிறைவேற்ற முடியும் என்பதை உணர்ந்தார். ''யாழ்ப்பாணச் சமயநிலை'' என்ற அவரது கட்டுரையில் இவ்வுணர்வைக் கண்டு தெளியலாம். இதனைக் கவனிக்கும் போது நாவலர் மீட்டுயிர்ப்புவாதியாயும் சீர் திருத்தவாதியாயும் இயங்கியதைத் தெளிந்து கொள்ளலாம். திரு. வி. கலியாணசுந்தர ஞரை எடுத்துக்கொண்டால் சமய, சமுதாயத் துறைகளிலே பல சீர்திருத்தங்களை எடுத் துரைத்த அதே வேளையில், சித்தாந்தம், வேதாந்தம், வள்ளுவம், காந்தீயம், மார்க் சீயம் முதலியவற்றை ஒன்றிணைத்துச் சமரசம் காணவும் அவர் விழைந்தமையைக் காண் கிருேம். திரு. சி. என். அண்ணுத்துரை அவர்களை எடுத்துக்கொண்டால் பகுத்தறிவு, நாத்திகம், வைதிக மறுப்பு, வர்ணுசிரம எதிர்ப்பு முதலியவற்றை வலியுறுத்தி இயக் கம் நடத்திய சீர்திருத்தவாதியாய்த் தோற்ற மளித்த அவர், பழந்தமிழ்க் கொள்கைகளையும் நாகரிகத்தையும் மீண்டும் நிலைநாட்ட விரும் பிய மீட்டுயிர்ப்புவாதியாவும் இயங்கினர் என் பது மறுக்க வியலாததொன்ருகும். உண்மை யில், இருபதாம் நூற்ருண்டிலே மார்க்சீயம் தமிழில் பயிலத் துவங்கிய பின்னரே மேற் கூறிய மூன்று போக்குகளின்றும் விடுபட்டு வரலாற்றுணர்வுடனும் இயக்கவியல் அடிப் படையிலும் பிரச்சனைகளை நோக்கி நடை முறைக்குத் தேவையான மார்க்கங்களைக் கூறும் போக்கு ஓரளவு வளர்ந்து வந்திருக் கிறது.

இலக்கியத்துறையை–குறிப்பாக சிருஷ்டி இலக்கியத்தை — ஆராயும் பொழுதும் இவ்வுண்மையைக் கண்டு கொள்ளலாம். உதாரணமாக, ஈழத்து நவீன தமிழிலக்கிய முன்னேடியாம் பாவலர் தெ.அ. துரையப்பா பிள்ளையை எடுத்து நோக்கினல் ஒன்றிணைக் கும் நோக்கும் — போக்கும், அவரிடத்துக்

காணப்படும். 'யாழ்ப்பாண சுவதேசக் கும்மி' என்ற நூதனமான படைப்பில் மரபு வழி வரும் மதிப்பீடுகளுக்கும் புதிய ஆசாரங் களுக்கும் இடையே தோன்றும் முரண்பாட் டைக் காண்பதோடு, அதற்கு ஆசிரியர் பரிகாரம் காண முற்பட்டமையும் காணலாம்,

*சிற்சில் ஐரோப்பிய பழக்க வழக்கஞ்*
*சிறந்ததென் பதற்காட் சேபமில்லை*
*முற்சிந்தனையின்றி நந்தேசா சாரங்கள்*
*முற்றும் விடலாமோ?*
*எம்முள்*
*நல்லாயிருக்கும் பழக்க வழக்கத்தை*
*நாம் விடலாகாது.*

என்று பாவலர் பாடுகையில் அவரது இலக் கிய நோக்கின் அடிப்படை வெளிப்படை யாகின்றது.

உண்மையில் மகாகவி பாரதியின் கவிப் படைப்புகளிலேயே இப்போக்குகள் மூன்றை யும் வெவ்வேறு அளவிற்காணக் கூடியதா யுள்ளது. ஒன்றையொன்று ஈர்த்தும் எதிர்த் தும், தழுவியும் மறுத்தும், நிற்கும் வலித் திழுப்பு நிலையிலே tension- முரண்பாடுகள் சங்கமாகும் அபூர்வ ஆற்றல் பிறக்கிறது. இலக்கியத்துக்கு இந்நிலை பெருவாய்ப் பானது.

குருட்டுத்தனமாக ஆங்கிலக் கல்வியைப் 'பேடிக்கல்வி' என்றும், 'ஊணர் கல்வி' என்றும் கண்டிக்கும் கவிஞர், வேறொரு நிலையில் 'சென்றிடுவீர் எட்டுத் திக்கும்; கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப் பீர்' என்றும்' புத்தம் புதிய கலைகள், பஞ்ச பூதத்தின் நுட்பங்கள் கூறும்; மெத்த வளருது மேற்கே' என்றும் கூறினர்.

நவீன உலகிலேயே, குறிப்பாக விஞ்ஞா னமும் கைத்தொழிலும் உலகை எத்தனையோ வழிகளில் பிணைத்து இணைக்கும் பொழுது, கிழக்கு-மேற்கு, பழமை புதுமை, ஆன்மீகம்- அறிவியல் முதலான பல்வேறு தளங்களி லிருந்து முரண்படும் போக்குகள் எழுவது இயல்பே. அது புறநிலை நிகழ்வு. அவற்றை ஏற்று இனங்கண்டு, அவைக்கேற்ற அகநிலை உணர்வின உருவாக்கிக் கொள்வதே நவீன இலக்கியத்தின் இன்றியமையாத் தேவையா யுள்ளது. இத்தேவையைப் பொருளுணர்வு டனும் கலை நுணுக்கத்துடனும் நிறை வேற்றும் இலக்கிய கர்த்தாக்களே ஆற்றல் நிறைந்தோராகக் கணிக்கப்படுகின்றனர்.



## வாழ்க்கைக் குறிப்பு:

*டாக்டர். க. கைலாசபதி 1933ல் மலேயா வில் பிறந்தார். இவர் கோலாலம்பூர் விக்டோ ரியா கல்வி நிறுவனத்திலும், யாழ்ப்பாண இந்துக் கல்லூரியிலும், கொழும்பு ராயல் கல்லூரியிலும் கல்வி கற்றார். இவர், இலங்கைப் பல்கலைக் கழகத்தில் பட்டப்படிப்பை முடித்த பின், தேசிய நாளிதழ் ஒன்றின் ஆசிரியராகச் சிலகாலம் கடமையாற்றினர் 1961ல் இலங் கைப் பல்கலைக்கழகத்தில் சேர்ந்து முதுகலைப் பட்டம் (M.A.) பெற்றார். பின்னர், 1966ல் பர்மிங்காம் (Birmingham) பல்கலைக் கழகத் தில், இவர் கலாநிதி பட்டம் பெற்றார். இவர் ஒப்பு இலக்கியங்கள் சம்பந்தமாக ஆய்வு செய்திருந்தார். இப்பொழுது இவர், யாழ்ப் பாண பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரிய ராகவும், கலைக் கல்வியின் தலைமைப் பொறுப் பிலும் (Dean of Faculty of Arts) கடமை யாற்றுகிறார்.*

*இவர் 1977-78ல் கலிபோர்னியா பெர்கலி பல்கலைக் கழகத்தில் நடமாடும் பேராசிரியராக வும் (Visiting Professor) கடமையாற்றியுள் ளார். இலக்கிய திறனாய்வாளரான இவர், சில படைப்புகளும், பன்னிரண்டு புத்தகங்களும் எழுதியுள்ளார். ஆக்ஸ்போர்டு பல்கலைக் கழக பதிப்பகம், அவருடைய 'தமிழ்வீர காவி' யத்தை (Tamil Heroic Poetry) வெளியிட்டிருக்கிறது. டாக்டர் க. கைலாசபதி வெளிநாடுகளுக்கு பலமுறை பயணம் சென்றிருக்கிறார். இவருக்குத் திருமணமாகி, இரண்டு மகள்களும் இருக்கி றார்கள்.*

நாடகம்:

# மனுநீதி

—காசியபன்

பாத்திரங்கள்:
1. சோழ அரசன்
2. அரசி
3. இளவரசன்
4. சாத்தன் (தேரோட்டி)
5. வாசந்தி (சேடி)
6. காவலர்

## காட்சி 1

(இடம்: அரண்மனை;
காலம்: மாலைப்பொழுது)

*[அரசி மஞ்சத்தில் சாய்ந்தவாறு, சாரளத்தின்வழியே, வானவெளியைப் பார்த்தபடி வீற்றிருக்கிருள். சூரியன் தங்க கம்பியாக ஒளிக்கற்றையை வீசுகின்ருன்]*

*அரசி*: வாசந்தி......

[வாசந்தி என்ற சேடி வருகிருள்]

*வாசந்தி*: வணக்கம் மகாராணி!

*அரசி*: ஏய் வாசந்தி! எத்தனைமுறை சொல்வது என்னை மகாராணி என்று அழைக்க வேண்டாமென்று! அம்மா என்று அழைத்தாயே போதும். என்ன புரிகிறதா?

*வாசந்தி*: சரி மகாரா......... அம்மா?

*அரசி*: இன்னும் அப்படித்தானே அழைக்கிருய்! ...ம் நீ அப்படி அழைக்கும்பொழுது என்மனம் பொறுப்பதில்லையே அதை!

*வாசந்தி*: அம்மா! என்னல் இந்தப் பழக்க வழக்கத்தை மாற்ற முடியவில்லையே! நீங்களோ, சோழசாம்ராஜ்யத்தின் அரசி! நானே ஒரு ஏழைக்குடிமகனின் ஏழாவது மகள்; பணக்காரரைக் கண்டால் பல்லிளித்து வாழும் பரம்பரையைச் சேர்ந்தவள்! நீங்கள் இந்த நாட்டில் எல்லோரையும் சமமாக மதிக்கிறீர்கள். ஆனல் உலக நியதி அப்படியிருக்கவில்லையே!

*அரசி*: ஏய் வாசந்தி! நீ கூறுவதைப் பார்த்தால் இந்த நாட்டில் ஏழை பணக்கார வேறுபாடு கொடி கட்டிப் பறக்கும் போலிருக்கிறதே! பஞ்சம் நிறைந்த பிற நாடுகளில்தான் அப்படியென்ருல், நஞ்செய் நிறைந்த நமது சோழ வள

நாட்டிலுமா அந்த நிலை?

*வாசந்தி* : அம்மா ஏற்றதாழ்வு — ஏழைப் பணக்கார னென்பது ஆண்டவனுல் ஏற்படுத்தப் பட்ட நியதி! அரசன் பார்த்து அதை எதுவும் செய்து விட முடியாது!

[*அரசன் உள்ளே நுழைகிருன். பணிப் பெண் வாசந்தி மன்னனை வணங்கி பின் தள்ளி சென்று விடுகிருள்*]

*அரசன்* : என்ன தேவி! ஆண்டவன்-அடிமை மேலோர்-கீழோர்? பேச்சுவார்த்தைகள் பலமாக அடிபடுகிறதே!

*அரசி* : ஹூம் ......(பெருமூச்சுடன்) சும்மாத் தான் கேட்டேன். மனுநீதி—மனுநீதி யென்று கனவிலும் நினைவிலும் துதிக்கி றீர்களே, அவையெல்லாம் நடக்கிறதா வென்று அந்தப் புரத்திலே அடங்கிக் கிடப்பவளுக்கு என்ன தெரியும்? அதனுல் தான் சேடியிடம் கேட்டேன்.

*அரசன்* : அதற்கு அவள் என்ன சொன்னுள்?

*அரசி* 'அம்மா, அதெல்லாம் ஆண்டவனுல் ஏற்படுத்தப் பட்ட நியதிகள்! அரசனுல் எதுவுஞ் செய்து விட முடியாது' என்று கூறிவிட்டாள்!

*அரசன்* : அதற்கு நீ என்ன சொன்னுய்?

*அரசி* : ஹூம்... இதுதான் நீங்கள் நாட்டை ஆளுகிற லட்சணமாக்கும் என்று பேசா மல் இருந்து விட்டேன்.

*அரசன்* : ஆண்டவன்—அடிமை; மேலோர் கீழோர் என்று ஆண்டவனுல் ஏற்படுத் தப்பட்ட நியதி என்னவோ உண்மை தான் தேவி! நானும் அந்த ஏற்றத்தாழ் வைப் போக்க முடிந்ததை யெல்லாம் செய்து வருகிறேன்.

*அரசி* : அப்படியானுல் நான் பிறந்த சேர நாட்டிலே பாடுவார்களே, 'மாவலி நாடு ஆளுங்காலம், மனிதர்களெல்லோரும் சமமென்று'—அதெல்லாம் பொய்தானு?

*அரசன்* : பேதையே! ஆண்டவன்தான், மேலோர் கீழோர் என்று படைத்து விட்டானே யொழிய, நான் அப்படியா நடந்துகொள்கிறேன்? நீ தான் அப்படி நடந்து கொள்கிருயா? அதைத்தான் அவர்கள் அப்படி பாடியிருக்கிருர்கள். அது தான் மனுநீதியுங்கூட!

*அரசி* : இவையெல்லாம் பாரமாகத் தெரிய வில்லையா நாதா?

*அரசன்* : எனக்குத் துணையாக அமைச்சர் ஆலோசகர், ஒற்றர்கள், காவலர்கள், ஏவலர்கள் எத்தனையோ பேர்களிருக்க இதிலென்ன பாரம் வந்துவிடப்போகி றது?

*அரசி* : அப்படியாயின் ஆராய்ச்சி மணியின் அவசியமென்ன நாதா!

*அரசன்* : தேவி, சூரியகுலம் தழைக்க வேண்டுமென்பதில் அக்கறை கொண்ட வன் நான். அதனுல்தான் மனுநீதி என்ன சொல்கிறதோ அதன்படி யெல்லாம் நடந்து வருகிறேன். ஆனுலும் கூட அமைச்சர்களும், ஏனையோர்களும் எந்த அளவுக்கு ஒத்துழைப்பு தரு கிருர்கள் என்று அறிய வேண்டாமா? அதற்காகத்தான் ஆராய்ச்சி மணியைக் கட்டி வைத்திருக்கிறேன்.

*அரசி* : அப்படியென்ருல்......?

*அரசன்* : ஆலயமணியை ஆட்டினுல் ஆண்ட வன் தரிசனம் கிடைக்கும். ஆராய்ச்சி மணியை ஆட்டினுல் நாட்டை ஆள்கிற வனின் தரிசனம் கிடைக்கும்.

*அரசி* : அப்படியானுல், இதுவரை அந்த மணியின் நா அசையவே இல்லையே!

*அரசன்* : அதிலிருந்து எனது அமைச்சர் களும் ஏனையோரும் சரிவர நடந்து கொள்கிருர்கள் என்று தெரியவில்லையா தேவி?

*அரசி* : நாதா! உங்களது காலத்தில் எல்லாம் சரியாய் நடக்கும். உங்கள் மகன் மனுநீதிப்படி ஆளுவான் என்ப தற்கு என்ன உறுதியிருக்கிறது?

*அரசன்* : என் ரத்தத்தில் ஊறியவன் என்னைப் போலவே இருப்பான் என்ற நம்பிக்கையிருக்கிறது.

*[அதே நேரத்தில் இளவரசன் வருகிருன்.]*

*இளவரசன்* : அப்பா, உறையூர்வரை போய் வர வேண்டும் விடைகொடுங்கள். அங்கு மல்லர்களின் சண்டைப் போட்டி நடைபெறுகிறதாம். காண வேண்டுமென்று விரும்புகிறேன்.

*அரசன்* : மகனே! எனக்குபின் இந்த பூபாரம் தாங்கவேண்டியவன் இப்படி பொறுப்பில்லாமல், மல்லர் சண்டையென்றும், கள்ளர் சண்டையென்றும் கூறித்திரிகிருயே!

*இளவரசன்* : அப்பா, தாங்களும் எனது வயதினைத் தாண்டியவர்தானே! அப்பொழுது உங்களிடம் இருந்த அதே துடிப்புதானே எனது உள்ளத் துடிப்பும்! அதையறிந்திருந்தும் இது போன்ற நிகழ்ச்சிகளைக் காண அனுமதி மறுக்கிறீர்களே!

*அரசி* : அனுமதி கொடுங்களேன் நாதா. அவனுந்தான் ஆசைப்படுகிருன் அல்லவா?

*அரசன்* : சரி! சரி! சென்று வா. நீயும் சண்டை அது இது என்று எதிலும் கலந்து கொள்ள வேண்டாம். ஆமாம் யார் தேரை... ஓட்டுகிருன்!

*இளவரசன்* : உங்கள் சாதி...அந்த சாத்தான் தான் ஓட்டுகிருன்! ஏன் அப்படி கேட்கிறீர்கள்?

*அரசன்* : சும்மா கேட்டேன்! (தேரோசை கேட்கிறது) சரிசரி சாத்தன் வந்துவிட்டான். பத்திரமாக சென்று வா!

*[இளவரசன் செல்கிருன்]*

*[திரை]*

## காட்சி 2

(இடம் : ராஜவீதி, நேரம் : மாலைப்பொழுது)

*இளவரசன்* : சாத்தா கொஞ்சம் இப்படி வா. நானே தேரோட்டுகிறேன்.

*சாத்தன்* : இளவரசே! இப்பொழுது மாலை நேரமாகிவிட்டது. ஆவினங்கள் மேய்ச்சலுக்குச் சென்று திரும்புகின்ற நேரம் நீங்கள் தேரோட்ட வேண்டாம்.

*இளவரசன்* : நீ தேரோட்டினுல் ஊர் போய்ச் சேர்ந்தது மாதிரி தான். வா, இப்படி! [அதட்டுகிருன்]

*[சாத்தன் சாரதி ஸ்தானத்தை இளவரசனிடம் அளித்து விடுகிருன்]*

*சாத்தன்* : இளவரசே கொஞ்சம் மெதுவாகவே ஓட்டுங்கள். ஊரைக் கடந்ததும், வேகமாகச் செல்லலாம்.

*இளவரசன்*: எனது சாரத்தியதை மக்கள் காண வேண்டாமா? ஊரைவிட்டு சென்றபின் ஓட்டிப் பயனென்ன?

*சாத்தன்* : அதோ! மந்தை மாடுகள், இளவரசே! சற்று மெதுவாகவே ஓட்டுங்கள்.

*இளவரசன்* : சாத்தா, பேசாமல் இருக்க மாட்டாய்! எனக்கு எல்லாம் தெரியும்.

*சாத்தன்* : சரி இளவரசே! உங்கள் இஷ்டப்படியே ஓட்டுங்கள்.

*இளவரசன்* : (இனிமையான குரலில்)... சாத்தா ராஜ வீதியைக் கடந்த பின்பு தான், ஏழைப் பெண்களின் எளிமை அழகு என்னைக் கவருகிறது. தான் இது வரை இந்த வீதியில் உலாவரவே இல்லையே! அதோ பதினறு நிறையாத ஒரு பிறை நிலா வருகிறது பார்த்தாயா?

*சாத்தன்* : இளவரசே எட்டத்தில் ஒரு பசு வீதியைக் கடக்கிறது! பார்த்து ஓட்டுங்க்ள்.

*இளவரசன்* : அதுதான் வீதியைக் கடந்துவிட்டதே! (குரலை தணித்து) நான் சொல்வது உன் காதில் விழவில்லை?

*[ம்மா என்று அலறல் கேட்டு. தேர் நிறுத்தப்படுகிறது. தேர்க்காலில் கன்று*

*ஒன்று சிக்கி துடித்துச் செத்துவிட்டது, அந்த கன்றின் தாய்ப்பசு அந்த இடத்திலே யே கண்ணீர் வடித்து நிற்கிறது. அதற்குள் அந்த மாட்டுக்குரியவனும் வந்து விடு ருகின்]*

*இளவரசன் :* (தேரிலிருந்தவாறே) டேய் இந்த மாடு யாருடையது?

*அந்த ஆள் :* வணங்கிய படியே! என்னு டைய உடைமைதான் இளவரசே!

*இளவரசன் :* சரி! சரி! இதிலிருக்கும் பணத்தை பெற்றுக்கொள்!

[பணத்தை வாங்கி சாத்தன் அவனிடம் கொடுக்கிருன். அந்த ஆள் பணத்தைப் பெற்றுக்கொண்டு மாட்டைப் பிடிக்கச் செல்கிருன். அது ஓடிவிடுகிறது.]

*இளவரசன் :* [தேரை ஓட்டிக்கொண்டே]... சாத்தா கண் இமைக்கும் நேரத்தில் இந்த விபத்து நடந்து விட்டதே!

*சாத்தான் ;* பசு வீதியின் ஒருபுறம் – அதன் கன்று மறுபுறம் இருக்கையில் நீங்கள் தான் தேரை பார்த்து ஓட்டியிருக்க வேண்டும்!

*இளவரசன் :* கன்றுதான் எங்கோ தூரத்தில் நின்றதே!

*சாத்தான் :* இதுபோன்ற சில இயற்கை விதி களும் உண்டு. இளவரசே! தேரைக் கண்டவுடனே, கன்று பயந்து தாயைத் தான் தேடிச் செல்லும். எனவேதான் கவனித்து ஓட்டச் சொன்னேன்.

*இளவரசன் :* சரி ஏப்படியோ தவறு நடந்து விட்டது! போகட்டும்!

*[திரை]*

## காட்சி 3

(இடம் : அரண்மனே,
நேரம் : காலேப்பொழுது)

*[ஆராய்ச்சி மணி அடிக்கிறது. எல்லோரும் ஆச்சரியப்படுகிருர்கள். ஒரு பசு தன் வாயில் கயிற்றைக் கவ்விக்கொண்டு மணியை அடிக்கிறது. அமைச்சர் துடித்துப் போகிருர்.]*

*அரசன் :* காவலா! அமைச்சரை அழைத்து வா! [அமைச்சர் அவன் சொல்லு முன்பே வந்து விடுகிருர்]

*அமைச்சர் :* வணக்கம்! அரசே!

*அரசன் :* என்னது ஒருநாளுமில்லாத திருநாள் இது! ஆராய்ச்சி மணி அடிக்கிறதே!

*அமைச்சர் :* அது ... வந்து ... ஒரு மாடு மணியை அடிக்கிறது அரசே!

*அரசன் !* அதைப் பார்த்ததிஞல்தான் கேட் கிறேன். மாட்டினேத் துரத்தியிருக் கலாமே! அது உங்களால் முடியாது. அதற்கு ஏதோ தீங்கு நேர்ந்திருக்கிறது. நீங்கள் மூடி மறைத்திருக்கிறீர்கள், இல்லேயா!

*அமைச்சர் ;* அரசே! மன்னிக்கவேண்டும் இளவரசரின் தேர்ச்சக்கரம் பட்டு கன்று இறந்து விட்டது. அதஞல் தான் ......

*அரசன் :* என்ன அதஞல்தான்...[காவலனேப் பார்த்து] இளவரசனேக் கூட்டி வா!

*[இளவரசன் வருகிருன்]*

*இளவரசன் :* வணக்கம் அரசே! என்னே அழைத்தீர்களா?

*அரசன் :* ஆமாம்! அழைத்தேன் [ஏளனத் துடன் கூறுகிருன்]

டேய்! கோட்டை வாசலிலே நிற்கிறதே அந்தப் பசுவின் கன்றைக் கொன்றது நீ தானே!

*இளவரசன் :* தேர்க்காலில் பட்டுவிட்டது.

*அரசன் :* யார்? சாத்தான் தேரோட்டிஞை?

*இளவரசன் :* இல்லே! நானேதான் ஓட்டி னேன்!

*அரசன் :* பின்னே என்ன நீ தானே கொன் றிருக்க வேண்டும்?

*இளவரசன் :* கன்று எங்கோ நின்றது! அது வாகத்தான் உள்ளே வந்து விழுந்து விட்டது.

*அரசன் :* (சாத்தனைப் பார்த்து) அப்படியா! இவன் சொல்வது உண்மைதானா சாத்தா?

*சாத்தன் :* உண்மைதான்.

*அரசன் :* உனது மனசாட்சிப் படிச் சொல்ல வேண்டும். மாட்டுக்கு உங்களைப்போல் பேசத் தெரியாது! அதனால்தான் கேட்கிறேன். அவன்மேல் குற்றமில்லை என்று சொல்ல முடியுமா?

*சாத்தன் :* அப்படியும் சொல்ல முடியாது அரசே!

*அரசன் :* ஏன் முடியாது?

*சாத்தன் :* அரசே, பசு வீதியின் ஒருபுறமும், கன்று வீதியின் மறுபுறமும் நின்றது என்னவோ, உண்மைதான்! இது ஒரு இக்கட்டான நிலை என்று இளவரசுக்குத் தெரியாது. தேரோசைக் கேட்டவுடன், பயத்தால் கன்று பசுவிடம்தான் ஓடும் என்ற நுணுக்கம் தெரியாமலே தேரைச் செலுத்தியதால் வந்த வினை.

*அரசன் :* வேறு தேரோட்டியாக யிருந்தால் தேரைச் செலுத்தி யிருக்க மாட்டான், அப்படித்தானே!

*சாத்தன் :* ஆமாம் அரசே!

*அரசன் :* அப்படியாயின் நீ எடுத்துக் கூறி விபத்தினை ஏன் தடுக்கவில்லை?

*சாத்தன் :* [தயங்கியபடி] குறிப்பாக கூறினேன்; விபரமாகக் கூற அவகாசமில்லை இளவரசும் புறக்கணித்து விட்டார். அதற்குள் விபத்தும் நேர்ந்துவிட்டது!

*அரசன் :* *[இளவரசனைப்பார்த்து கோபத்துடன்]* இப்பொழுது என்ன சொல்கிறாய் நீ?

*இளவரசன் :* ......மாட்டுக்காரனே யாரிடமும் முறையிட வில்லையே? நீங்கள்...

*அமைச்சர் :* ஆமாம் அரசே! அதனால் தான் நாங்கள் வழக்குகளை விசாரிக்கவில்லை.

*அரசன் :* என்ன எல்லோரும் சேர்ந்து உளருகிறீர்கள். மாடுதான் அவனுக்குரியது; ஆனால் கன்று மாட்டுக்குரியது. அதனால் தான் அது முறையிட்டு இருக்கிறது. இப்பொழுதெல்லாம் மாட்டுக்குத்தான் நீதி தேவைப்படுகிறது. வாய் பேசத் தெரிந்த மனிதனுக்கு தேவைப்படவில்லை. தேவைப்பட்டாலுங்கூட, அந்த நீதியைக் கேட்கும் துணிச்சல் அவனுக்கில்லை. சரி! சரி! என்ன தண்டனை வழங்கலாம் அமைச்சரே!

*அமைச்சர் :* எனக்கு இப்படி ஒரு நீதியை வழங்கிட துணிச்சலில்லை அரசே! நீங்களே வழங்கிவிடுங்கள்.

*அரசன் :* உமக்கு நீதி கூறவும் துணிச்சலில்லையா? சரி! நானே, சொல்லிவிடுகிறேன் அவையோர்களே கேளுங்கள்! கன்றினைக் கொன்ற இவனை அதேபோன்று தேர்க்காலில் ஏற்றிக்கொல்ல வேண்டும்! அதுவும் அவனுடைய தந்தைதான் தேரோட்ட வேண்டும். முடிந்தால் அவனது தாய் தேரோட்டினால் இன்னும் சிறப்பு. அப்பொழுதுதான் அந்தப் பசுவின் துயரம் ஆறும்; இதுதான் அரசனின் தீர்ப்பு!

## காட்சி 4

[இடம் : ராஜ வீதி. நேரம் : நண்பகல்]

*[தீர்ப்பு பறையடிக்கப் படுகிறது; அந்தப் பசு கொஞ்சம் ஆறுதலடைந்தது. பறை ஒலி கேட்டு அரசி ஓடிவருகிறாள்; நடந்தவற்றையெல்லாம் சேடிமூலம் கேட்டவள் அதனை தடுத்துநிறுத்தி விடலாம் என்று எண்ணுகிறாள்.]*

*அரசி :* நாதா! என்ன காரியம் செய்து விட்டீர்கள் அறியாமற் செய்த பிழைக்கு இவ்வளவு தண்டனையா!

*அரசன் :* தண்டனை வகுத்தது நானல்ல!... மனு! அதனை வழங்குபவன்தான் நான்.

*அரசி :* ஐயோ! உங்களுக்கு கொஞ்சமேனும் ஈவு இறக்கமிருக்கிறதா? பெற்ற மகனை யே கொல்லத் துணிந்துவிட்டீர்களே!

*அரசன் :* தாய் செய்யமாட்டாள் அந்த காரியத்தை தந்தை செய்யட்டும் என்று கொஞ்சம் சட்டத்தை வளைத்துக் கொடுத்திருக்கானே மனு.

*அரசி :* ஐயோ நாதா சூரிய வம்சம், சூரிய வம்சம் என்று கதைப்பீர்களே அது இன்றோடு சரியாப் போய்விட்டதே [அரற்றி அழுகிறாள்]

*அரசன் :* என்னோடு போய்விட்டது என்று நினைத்து நீ இன்றோடு போய்விட்டது கூறுகிறாய். சூரியன் உள்ளளவும் ஒருத்தனாவது நீதி தவறாமல் ஆளத்தான் செய்வான்!

*[காலைப் பிடிக்கிறாள் அரசி அவனை உதறி விடுகிறான்.]*

*அரசன் :* (காவலர்களைப் பார்த்து) காவலர்களே தண்டனையை நிறைவேற்ற எல்லாம் தயாராகி விட்டதா?

*காவலர் :* எல்லாம் தயாராகிவிட்டது மன்னா!

*அரசன் :* எல்லாம் தயாராகிவிட்டது என்றீர்களே! தேர் வந்திருக்கிறது. அணிந்து செல்ல தார் எங்கே! தந்தை மகனைக் கொன்றானென்றில்லாமல், தார் வேந்தன் தேர் ஏற்றிக் கொன்றான் என்றிருக்கட்டுமே!

*காவலர் :* (தயங்கியபடி) அரசே உலாச் செல்பொழுதுதானே தார் அணிந்து செல்வீர்கள்...இப்பொழுதுமா?

*அரசன் :* பசுவின் கன்றினைக் கொன்றபோது அவன் தார் அணிந்துதானே கொன்றான். நானும் நீதி செலுத்தும்பொழுது கொஞ்சங்கூட வருத்தப்பட்டேன் என்று இருக்கக்கூடாது. கொண்டு வாருங்கள் தாரை!

*[காவலர் ஆத்திமாலையை அணிவிக்க தேர் உலாப் புறப்பட எத்தனித்தது]*

*இளவரசன் :* காவலர்களே நான் மட்டும் என்ன அரசனுக்குக் கொஞ்சமும் இளைத்தவனல்ல. அவன் நீதி செலுத்துகிறானென்றால், எனக்கு நீதியை ஏற்கும் பக்குவமுண்டு. விடுங்கள் என்னை! நானே தண்டனையை ஏற்றுக் கொள்கிறேன்.

*[காவலர்கள் விட மறுக்கிறார்கள்]*

*அரசன் :* என்ன அங்கே தகராறு?

*காவலர் :* அரசே இளவரசர் தானே முன் வந்து தண்டனையை ஏற்றுக்கொள்ளப் போகிறாராம்!

*அரசன் :* அப்படியொன்றும் விட்டுவிட வேண்டாம்! தப்பிவிடப் போகிறான்.

*இளவரசன் :* யாரைப்பார்த்துக் கேட்கிறீர்கள் இந்தக் கேள்வியை! ஏதோ தனக்குமட்டுந்தான் நீதி தெரியும் மற்றவர்களெல்லாம் நீதி பிறழ்ந்தவர்கள் என்ற நினைப்பு!

*அரசன் :* சரி அவனை விடுங்கள் பார்க்கலாம்!

*இளவரசன் !* ஏனமா பேசுகிறீர்கள். நானும் சூரிய வம்சத்தில் வந்தவன் தான். நீங்கள் நீதியைக் காத்தீர்கள் என்றால், நான் அதுக்கு ஒத்துழைத்தேன் என்றாவது இருக்கட்டும்.

*[தேர் ஓடுகிறது. கன்றினைப்போலவே இளவரசன் ஓடிவருகிறான். அந்த ஓரத்தில் அரசி அலறுகிறாள். தேர்க்காலில் பட்டு துடித்துச் சாகிறான்.]*

*அரசன் :* (தனக்குத் தானே) ஐயோ மகனே என் வயிற்றுதித்த குலக்கொழுந்தே! தந்தையைவிட தனயன் உயர்ந்தவன் என்று காட்டிவிட்டாயே! நீதி... நீதி... நீதி... என்ன பெரிய நீதியைக் கண்டுவிட்டேன் பொற்கைப் பாண்டியனைப் போல, தன் கையையா வெட்டிக்கொண்டேன். அப்படியிருந்தாலும்கூட பெருமைப்படலாமே! ஊரேற்றுக் கொள்ளுமா இந்த நீதியை? என்னயிருந்தாலும்;

தேரேற்றிக் கொன்ற பழி என்னை வந்து சேரட்டும்; ஆனல், தானேற்றுக் கொண்டான் அந்த நீதியை என்றேனும் இந்த உலகம் உன்னைப் புகழாதா? அந்தப் புகழுக்குப் பாத்தியப்பட்டவன் என்மகன் என்ற பெருமை யொன்றே போதும். சே,... என்ன ஈனத்தன்மை? உனது சாவிலுங்கூட எனக்கு அப்படியொரு நிம்மதியா? இப்படியொரு வெட்கக் கேடா? ஏ கடவுளே! உனது சோதனையை நல்லவர்களிடமே நடத்துகிருயே! இதனல்தான் பலர் நல்லவர்களாக வாழ்வதற்கே அஞ்சுகிருர்கள் என்ற உண்மை உனக்குத் தெரியாதா? தெரிந்திருந்தால் இப்படியொரு சோதனையைத் தந்திருக்க மாட்டாய் நீ! ரத்த ஆறே ஓடியபின் தான் ரத்தபாசத்தை உணர்கிறேன்! அதற்கெல்லாம் காரணம் அரச வேசம். கலையட்டும் வேஷம்; நிலைக்கட்டும் பாசம்!

(கதறுகிருன்)

*[மன்னனின் இந்த நிலைகண்டு, அந்தப் பசு மீண்டும் கண்ணீர் உகுத்தது. கிட்ட வந்து அவனை வாயால் முகந்து ஆறுதலளித்தது. ஆண்டவன் இதற்காகத்தான் இரண்டு கண்கள் படைத்தானே என்று எண்ணு மளவிற்கு கன்றுக்காக ஒருபுறமும், மன்னனுக்காக மறுபுறமுமாக இருபெருந் துன்பங்களை தாங்கிச் சென்றது. ஊமை மொழியினுக்குக் கூட தமிழ் மன்னன் உரிய மரியாதை அளித்த நீதியைப் பலவாறு பலரும் பாராட்டிப் பேசினர்.]*



## 'அவள் அபிப்பிராயம் என்னவோ?...'

ஒருவன் தன் ஐந்து வயது பையனைக் கண்மண் தெரியாமல் அடித்துக் கொண்டிருந்தான். கொஞ்ச தூரத்திலிருந்து அதனைப் பார்த்துக் கொண்டிருந்த ஒருவர், மனம் பொறுக்காமல் தட்டிக் கேட்கவும் முடியாமல், 'சே......என்ன மனுஷனய்யா இவன்? இவனுவனுக்கெல்லாம் பிள்ளைகுட்டி எதுக்கு? ராத்திரி வேற, பாய விரிச்சி, பெண்டாட்டி கூட படுத்துகிருனுங்க, என்ருர். பக்கத்திலிருந்த இன்னொருவர் கொஞ்சமும் அலட்டிக்காமல் நிதானமாக—இதமாக, 'அப்படின்ன...... அவள் அபிப்பிராயத்துக்கு இவன் மதிப்புக் கொடுக்க வேண்டாங்கிறீங்களா? என்ருர்; முதலில் சொன்னவர் வாயடைத்துப்போனுர்.

— *சிவனணைந்த பெருமாள்*

## இனிய விருந்தில் கசப்பான மருந்து!

இங்கிலாந்து இளவரசர் சார்லசுக்கு மேற்குவங்காள மாநிலக் கவர்னர் ஒரு விருந்தளித்தார். அந்த விருந்தில், மேற்கு வங்க அமைச்சரவையில் அங்கம் வகிக்கும் ஏழு பார்வர்டு பிளாக் அமைச்சர்கள் கலந்து கொள்ளாமல் புறக்கணித்து விட்டார்கள். இங்கிலாந்து மீது பார்வர்டு பிளாக் கட்சிக்குண்டான பழைய பகைமை ஏன்று தவருக எண்ணிவிடாதீர்கள்.

இங்கிலாந்து நாட்டு விமான நிலையத்தில், இந்தியப் பெண்களின் கன்னித் தன்மையை சோதித்தற்கு கண்டனம் தெரிவித்தே அவர்கள், அந்த விருந்தில் கலந்து கொள்ளவில்லை. இனிப்பான விருந்தில் பரிமாறப்பட்ட,இந்த கசப்பான மருந்து நலன் பயக்குமா?




தமிழ்நாட்டில் கோலம் என்ற கலை பெரும்புகழ் பெற்றிருக்கிறது. பெருவிரலுக்கும் அதற்கு அடுத்த விரலுக்கும் இடையே கோல மா அல்லது கோலப் பொடியை வைத்துக்கொண்டு பல கோணங்களிலும் வாட்டங்களிலும் மலர் வகைகளை வரைவதில் சின்னஞ் சிறு வயதிலேயே பெண் குழந்தைகளுக்குப் பயிற்சி கொடுக்கப்படுகிறது. ஒவ்வொரு நாளும் காலையில் எழுந்ததும் வீட்டு வாயிலின் முன்பாகத் தெருவில் கோலம் போடுவது வழக்கம். திருவிழா நாட்களில் தெருவெல்லாம் கோல வரைபடங்களாகக் காட்சி தரும்.

கோலம் போடும் கலையைத் தாயிடமிருந்து மகளும், அவளிடமிருந்து அவளுடைய மகளுமாக, தலைமுறை தலைமுறையாகப் பயிலுகிறார்கள். ஐந்து வயதாக இருக்கும்போது சிறுமிகளுக்கு இதில் ஆர்வம் ஏற்பட்டு 13–14 வயது வந்து பருவம் அடையும்போது இந்தக் கலையில் அவர்கள் வல்லவர்களாகத் தேர்ச்சி பெற்று விடுகின்றனர். பல வகையான மலர்கள் மட்டுமின்றி, சங்குகள், முக்கோண அல்லது நாற்கோணச் சித்திரங்கள், மயில், மீன், கோயில்களில் தீபம் காட்ட உபயோகிக்கப்படும் விளக்கு வகைகள், மாம்பழம் மற்றும் பெண்பாற் தெய்வங்களின் உருவங்களையெல்லாம் அவர்களுடைய மென்மையான விரல்களால், மண் தரையில் நளினமாக வரைந்து விடுவார்கள்.

நாள்தோறும் சாணிபோட்டு மெழுகுவதால், அந்தத் தரை சிமெண்டு போடப் பெற்ற தளத்தைப் போன்ற மென்மையையும் தன்மையையும் பெற்றுவிடும்.

குறிப்பாக, வெள்ளிக்கிழமையன்று கட்டாயம் கோலம் போடவேண்டும் என்பது நியதி. திருவிழா நாட்களில் தெருக்களின் கோலங்கள் கோலாகலக் காட்சி தரும். பெண்கள் தங்களுடைய கைத்திறமையையும் கலை ஈடுபாட்டையும் மண்தரையில் மட்டுந்தானா காட்டுகிறார்கள்? மண் பானைகள் வெண்கலக் குடங்கள், வீட்டின் முற்றங்கள், மணமக்கள் உட்காரும் மேடைகள் ஆகியவற்றிலெல்லாம் இவர்கள்—இள நங்கையர் மட்டுமின்றி வயது வந்த பெண்டிரும்—தங்கள் கைவரிசையைக் காட்டத் தவறுவதில்லை. திருமணம், திருவிழா முதலிய நிகழ்ச்சிக்களுக்கெல்லாம் கோலம் மேலும் மங்கலத்தை நல்கும். எனவே அந்த விழாக்களில் போடப்பெறும் கோலத்தை அழிக்கவும் கூடாது, தாண்டவும் கூடாது. அங்கு கோலம் இடுவதற்கு, முகூர்த்தம் பார்ப்பது வழக்கம். அந்தக் கோலங்களை

நீக்குவதற்கும் சில சடங்குகள் உண்டு.

நாள்தோறும் வீட்டு வாசலில் போடும் கோலத்திற்கு இத்தகைய விதி முறைகள் இல்லை. அந்தக் கோலத்தை மிதிப்பதிலும் தவறு இல்லை. வீட்டு வாசலில் உள்ள கோலம் கால் படாது இருந்தால், அந்த வீடு குழந்தையில்லாத வீடாகத்தான் இருக்கும்.

ஒவ்வொரு கிழமைக்கும் ஒரு வகைக் கோலம் உண்டு. ஞாயிற்றுக்கு உரிய கோலம் முக்கோண வடிவமாகவும், திங்கட்கிழமைக்கு உரியது சதுர வடிவமாகவும், செவ்வாய்க் கிழமைக்கு உரியது பந்துபோன்ற பதின் மூன்று வட்டங்களினூடே செல்லும் பெரிய வட்ட வடிவமாகவும் இருக்கும். இதுபோல ஒவ்வொரு கிழமைக்கும் குறிப்பிட்ட ஓர் உருவம் உண்டு. வெளிக்கோடுகள் வெள்ளை அரிசியாலான கோல மாவில் இருக்கும். நடுக்கோடுகள் மாவகைகளிலான பல நிறப் பொடிகளைக் கொண்டும் குங்குமத்தைக் கொண்டும் வரையப்படும். ஆதி சங்கரர் படைத்த சௌந்தரிய லஹரியில், நவராத்திரி விழாவின்போது ஒவ்வொரு நாளிலும் இன்ன இன்ன கோலம் வரையவேண்டும் என்று விவரிக்கப்பட்டிருக்கிறது

மாதங்களில் சிறந்தது மார்கழி. அந்த மாதத்தில் கோலம் போடுவது, தனிச்சிறப்பு உடையது. அந்த முப்பது நாட்களிலும் கோலத்தின்மீது சிவப்பு அல்லது வெள்ளை நிறப் பூசனிப் பூவை வைப்பது வழக்கம். இந்த மலர் கிடைப்பது அரிதாக உள்ள இடங்களில் ஒரு பூவை மட்டும் வைப்பார்கள். எளிதில் கிடைத்தால் ஐந்து பூக்கள் கோலத்தை அலங்கரிக்கும் சாணி பிடித்து அதைப் பீடமாக்கி அதனுள் பூவின் அடிப்பகுதியை ஊன்றுவது நெடுநாளைய நடைமுறை. சாணி, காசு செலவிடாமல் செய்யக்கூடிய பூப்பேழை (Flower Stand) ஆகிவிடுகிறது!

கோலம் கண்ணுக்கு அழகு. ஆனால் தமிழ் மக்கள் அதை வெறும் அலங்காரமாக மட்டும் கருதவில்லை. நம்மை வாழவைக்கின்ற பூமிக்கு நாம் நன்றி கூறுவதற்காக ஏற்பட்ட இப் பழக்கம், காலப்போக்கில் இனியதொரு கலையாக வளர்ச்சியடைந்திருக்கிறது. எறும்புகள், பறவைகள், அணில்கள் ஆகியவற்றிற்கு உணவாகப் பயன்படட்டும் என்று எண்ணி, அரிசி மா மட்டுமே கோலப் பொடியாகப் பயன்படுத்தப்படுவது வழக்கம்.

கோலம் அதைப் பார்ப்பவர்களை ஈர்க்கும். மனிதர்களைப் போல, தெய்வங்களையும் அது மயக்கும். வீட்டிலுள்ளவர்களுக்கு லெட்சுமி கடாட்சத்தை—தனத்தை, ஒரு நாளும் தளர்வறியா மனத்தை, தெய்வ வடிவத்தை, நல்லன எல்லாவற்றையும்—அருளும் ஆற்றல் கோலத்துக்கு உண்டு. வீடுகளில் லெட்சுமி கடாட்சம் இருந்தால், நாடும் நகரமும் செழித்துக்கொழிக்கும்)

*நன்றி :* தமிழ்நாட்டு மக்களின் மரபும் பண்பாடும்





# ராஜராஜன்

— தமிழ்ப்ரியா —

'ராஜராஜன்' அவனின் வாய் அவனுடைய பெயரையே மெல்ல முணுமுணுத்துக் கொண்டது... கைகள் சைக்கிளின் ரிம்மை அழுத்தித் துடைத்துக் கொண்டிருந்தன ... தன்னுடைய பெயரையும் தன் பாடப்புத்தகத்தில் வந்து சென்ற ராஜராஜனையும் ஒப்பிட்டுப் பார்த்தது அவன் மனம். கங்கை கண்ட சோழபுரத்தில் அவன் கட்டிச் சென்ற விண்முட்டும் ஆலயத்தின் அச்சுப்பட சரித்திரப் புத்தகத்தில் பார்த்தது... அவன் மனக் கண்முன்வந்து நின்ற அவனது ஓலைக் குடிசையின் உட்புறமிருந்த தாயை நோக்கி

'அம்மா கொஞ்சம் தேங்காயெண்ணை கொடுங்க'

''எண்ணெய் விக்கிற வெலைக்குத் தலைக்குத்தேச்சே கட்டுபடியாகலே துரை... சைக்கலுக்கு வேணுமாம் சைக்கலுக்கு......'' அவனுக்குத் தெரியும் அம்மாவின் வார்த்தைகளுக்கு அப்பீல் இல்லையென்று...

உள்ளே சென்று காக்கிநிறப்பையை எடுத்துக் கொண்டான்... கேரியரில் பையை வைத்துவிட்டு, ஸ்டாண்டை எடுத்து விட்டு ''போயிட்டு வர்றேம்மா... அப்பா வந்தா சொல்லிடுங்க...'' ஏறுவெயில் அவன் நெற்றியில் அடிக்க தார்ரோடுவரை உருட்டி வந்து அவனுடைய வாகனத்தின் மீது ஏறிப் புறப்பட்டான்... அவனுடைய கைகளில் ஒன்று அடிக்கடி பின்புறமிருந்த காக்கிப் பையைத் தொட்டுக் பார்த்துக் கொண்டது...

அப்பையில்தான் அவனின் எதிர்காலமே அடங்கியிருந்தது. சிகப்புநிற அட்டையிட்ட அவனின் S.S.L.C. புத்தகமும், Transfer Certificate, Conduct certificate, கட்டுரைப் போட்டி, பேச்சுப்போட்டி certificate போன்றவைகள் அடங்கியிருந்தது...... கட்டுரைப் போட்டியில் கிடைக்கும் பத்து ரூபாய் ரொக்கப் பரிசுக்காக அவன் எத்தனை இரவுகள் அம்மாவின் திட்டுக்களை வாங்கியுள்ளான்...... மண்ணெண்ணை தீர்ந்து விடுமே என்ற அவளின் கவலையெல்லாம் அந்த பத்து ரூபாயைக் கண்டதும் பறந்துவிடுமே......

S.S.L.C.யில் அவன்தான் பள்ளியிலேயே முதல் மாணவன், அதனுல் பள்ளியை நடத்தும் கல்லூரியிலேயே அவனுக்கு இடமும், இலவச உணவும் தருவார்கள்...

'எப்பாடு பட்டேனும் கல்லூரியில் படித்து பட்டம் வாங்கனும்... முதல் மாதச் சம்பளத்திலே அம்மாவுக்கு நல்ல மணிச் சரக்கு சேலே...... அப்பாவுக்கு சோலாப்பூர் துப்பட்டி... சின்னப்பொண்ணுக்கு சீட்டிப் பாவாடை ரெண்டு...எனக்கு நல்ல பேண்ட்... வீட்டுக்கு கரண்ட் லேட்டு... சம்பளத்திலே மீதம்பிடிச்சு சேத்துவைச்சு கிழக்கே இருக்கிற தரிசு நிலத்திலே கிணறு வெட்டனும் சொந்த விவசாயம் அப்பாவை விவசாயம் பார்க்கச் சொல்லனும்...... கூரையமாத்தி ஓடு போடனும்'

'ராஜராஜா......' அவனின் நண்பன் பார்த்தசாரதியின் குரல் அவனின் சிந்தனேயைக் கலேத்தது...... 'தாலுகா அலுவலகம்' என்ற பழைய துருபிடித்த அறிவிப்புப் பலகை அவனேப் பார்த்து சிரித்தது... சிரித்தவாறே 'இல்லே பார்த்தா... நான்பாட்டுக்கு வேறே ஞாபகத்திலே போயிட்டேன்' என்று கூறியவாறே சைக்கிளே மரத்தடியில் வைத்தான்.

பார்த்தனுக்கு அருகில் நின்று தன் கண்களேச் சுழலவிட்டான் அலுவலகத்திற்கு முன்பாக பலவிதமான மாணவர்கள் கும்பல் கும்பலாகப் பேசிக் கொண்டிருந்தனர். பெரியவர்கள் சிலர் நிழல் பக்கமாக அமர்ந்திருந்தனர். 'பார்த்தா மணி என்ன?' கேட்டுக் கொண்டே மனப்பட்ஜெட்டில் 'மொத்தமாகச் சம்பளம் வாங்கின ஒடனே ஒரு கெடிகாரம் வாங்கனும்' மேலும் ஒரு செலவிதைக் கூட்டிக் கொண்டான். 'பத்தாகப் போகுது' application பாரத்தில் கர்ணம், ரெவின்யூ இன்ஸ்பெக்டரிடம் கையெழுத்து வாங்கிட்டயா?' எனப் பார்த்தன் கேட்டான். 'ஓ வாங்கிட்டேனே நீ வாங்கிட்டாயா?' நான் போயி வாங்கல அப்பாவோட office peon போய் வாங்கி வந்தான்... சரி சரி வரிசையிலே நில்லு. தாசில்தார் ஜீப்வருது... சீக்கிரம் நில்லுடா...'

முண்டியடித்து அமைந்த வரிசையில் பார்த்தனுக்கு அடுத்து நின்று கொண்டான். வரிசை மெல்ல மெல்ல நகர்ந்து கொண்டிருந்தது. ராஜராஜனின் மனம் எதிர்காலத்தைப் பற்றி என்னென்னவோ கற்பனேயில் ஈடுபட்டுக் கொண்டிருந்தது. மீண்டும் மணியைப் பார்த்தான் பதினென்றரை. காலேயில் குடித்த சோளக்கஞ்சி ஜீரணித்துவிடவே வயிறு மீண்டும் இரைச்சலிட ஆரம்பித்தது.

'அப்பாடா பார்த்தன் டேபிலுக்கு போயிட்டான்... அடுத்தது நான்தான்...'

'சார், அப்பா இதைக் கொடுக்கச் சொன்னுர், தாசில்தார் கையில் ஒட்டப்பட்ட கவரைக் கொடுத்தான் பார்த்தன்.

'ஓ சேர்மேன் வீட்டுப் பையனு... அப்பா சௌக்கியமா?...'' அப்பாவை நான் ரொம்பக் கேட்டதாகச் சொல்லு... 'பார்த்தன் நீட்டிய தாளில் கையெழுத்திட்டுவிட்டு அருகில் இருந்த பியூனிடம் சீல் வைத்துத் தரச் சொன்னுர்.''

அவரருகில் சென்று நின்று வணக்கம் சொன்ன ராஜராஜனே நோக்கி 'என்னடா கர்ணத்துகிட்ட கையெழுத்து வாங்கிட்டயா?'

''ஓ வாங்கிட்டேன் சார்... ரெவின்யூ இன்ஸ்பெக்டரிடம்கூட வாங்கியிருக்கேன்...?'

கையெழுத்தைப் போட்டு அலட்சியமாக அவனே ஏற இறங்கப் பார்த்த தாசில்தார் 'இந்தப்பண்ணுடிப் பசங்களுக்கெல்லாம் படிப் பெதுக்குங்க... படிச்சிட்டு கலெக்டர் உத்தியோகமா பார்க்கப் போருனுங்க... பேசாம காட்டுவேலேயைப் பார்த்தா நல்லபடியா கஞ்சியாவது குடிக்கலாம்...' அருகிலிருந்த பெரியவர் அவரின் பேச்சை ஆமோதிப்பது போலத் தன் பற்கள் தெரியச் சிரித்தார்...அவருக்கு அவருடைய காரியம் ஆகவேண்டும்.

சீல் வைத்து வாங்குவதற்கு அவன் நகர்ந்தான் ''ஏம்ப்பே நிக்கிறே! டிராக்டர் ஒன்னு கொடு...'' என்று கூறியவாறே ஸ்டாம்பை இங்க்கில் வைத்துத் தேய்த்தான்.

'டிராக்டரா...' ராஜராஜனுக்கு ஒன்றும் புரியவில்லே.... அருகில் இருந்த இன்னொரு காக்கிச் சட்டைக்காரர் 'அஞ்சு ரூபா கொடப்பா... டிராக்டருன்னு இங்கே அஞ்சு ரூபான்னு அர்த்தம்' என்று விளக்கினுர்.

'ரூபா எதுக்கு'? என்று கேட்டதற்குச் 'செடி வாங்கனும்' என்று பதில் வந்தது... 'பணமில்லீங்க' என்று மெதுவாக பதிலளித்தான்...

'அப்ப வேலையப் பார்த்து போப்பே சிறுக்... பெத்த பறக் கழுதைக்குப் படிப்பு' என்று கூறிக்கொண்டே கையை நீட்டி அடுத்த ஆள் வருமாறு சைகை செய்கையில், வேகமாகத் திரும்பிய ராஜராஜனின் கால்கள் அவனை இடரியது... அவனின் கால்களில் அணிந்திருந்த தோல் செருப்பு அவனின் இடக்கையை அழுத்தியது... தாசில்தாரின் முகத்தை அவர் மேசையிலிருந்த கண்ணாடிக் குண்டு பதம் பார்த்தது... வெறிபிடித்தவன் போலத் தன்கையிலிருந்த தாள்களையெல்லாம் கிழித்தெறிந்தான்.

'எவனும் உருப்படமாட்டீங்கடா' என்று கத்திய அவன் குரல் எதிரொலிக்கும் முன்னர், அவன் ஓடிச்சென்று தன் சைக்கிளை எடுத்து மேற்கு நோக்கிப் பறந்தான். அவன் கால்களுக்கு எத்துனை அசுர பலம்... பின்னால் ஓடி அவனைத் துரத்திய காக்கிச் சட்டைகள் களைத்துத் திரும்பின.

அலுவலகத்தில் அங்காங்கே சிதறிக் கிடந்த காகிதத்தினூடே இருந்த சிவப்பு நிற மேலட்டை அனைவரையும் பார்த்துச் சிரித்தது. * *

# மனக் கோலங்கள்

—டாக்டர் இரா. மோகன்

''வாழ்க்கையில் இறப்புக்கும் இழப்புக்கும் உள்ள ஆற்றல் மிகுதி. ஒரு மனித வாழ்க்கையின் ஆணி வேரையே அசைத்துவிடும் —ஒருமனித உள்ளத்தின் அடித்தளத்தையே மாற்றிவிடும் ஆற்றல் அவற்றுக்கு உண்டு.''

''நாம் எவ்வளவு விழிப்பாக இருந்தாலும், மற்றவர் விழிப்பின்மையால் வாழ்க்கையில் சிலநேரங்களில் சில விபத்துக்கள் நிகழ்ந்துவிடுகின்றன''.

''தீராத காம வெறியை மலரினும் மெல்லிய காதல் உணர்வாக மாற்றும் திறம் பெண்ணின் அன்புக்கு உண்டு.''

''வாழ்க்கையில் குழந்தையும், பெண்ணும், சான்றோரும் கற்றுத்தரும் பாடங்கள் மிகப்பல.''

''சில உண்மைகளைக் காலமும் தனி வாழ்க்கையுமே உணர்த்த முடியும்.''

''சோதனைகளும் வேதனைகளும் மிகுந்த வாழ்க்கையிலேயே குறிப்பிடத்தக்க சாதனைகளைக் காணமுடியும்.''

*[தமிழ் மலர்ச்சி, ஆகஸ்ட், 1978]*

# புஸ் - புஷ்

—தமிழ்த் தொண்டன், பாரீஸ்

அன்று யோகா வகுப்பில், சூர்யநமஸ்கார், ஆசனம், பிரணயமா (மூச்சுப் பயிற்சி) எல்லாம் முடித்து இறுதியாக சவாசனு (Relaxation)செய்வதற்கு மாணவர்கள் தரையில் முதுகுப்புறமாகப் படுத்துக் கால்களை அகற்றிக் கைகளை விரித்து உடலின் எல்லாப் பாகங்களையும் தளர்த்தி ஆழமாக மூச்சுப் பயிற்சி செய்ய ஆரம்பித்தார்கள். எவ்வாறு மூச்சுப் பயிற்சி செய்கிருர்கள் என்றறிய நான் படுத்திருக்கும் மாணவர்களைச் சுற்றி ஒவ்வொருராகப் பார்த்து வரலானேன். ஒருவர் வாயைத்திறந்து வைத்துக் கொண்டு வாயால் சுவாசித்துக் கொண்டிருந்தார். நான் பிரஞ்சு மொழியில் 'வாயை மூடிக்கொண்டு மூச்சுப் பயிற்சியை நிதானமாகச் செய்யுங்கள்' என்று அந்த ஒருவருக்காக மொத்தத்தில் கூறிவிட்டு மற்ற மாணவர்களைப் பார்க்கச் சென்று விட்டேன். ஒரு சுற்றுச் சுற்றி விட்டுத் திரும்பும் போது வாயால் சுவாசிப்பவர் வாயாலேயே. சுவாசித்துக் கொண்டிருந்தார். மற்ற மாணவர்கள் ஒரு கையின் பெருவிரலைக் மடக்கிக் கொண்டார்கள். 'நான் முன்பே சொன்னேன் தயவுசெய்து வாயை மூடிக்கொள்ளுங்கள்' என்றேன். எல்லோரும் மற்ற கையின் பெருவிரலையும் மடக்கிக் கொண்டார்கள். திறந்தவர் வாய் திறந்தபடிதான் இருந்தது எனக்கு ஒன்றுமே புரியவில்லை. ஒருவாரியாக சவாசனு முடிந்து எல்லோரும் எழுந்து அமர்ந்தார்கள். 'ஏன் எல்லோரும் பெருவிரலை மடக்கிக் கொண்டீர்கள்' என்று கேட்டேன். 'நீங்கள் தானே FERMEZ LE POUCE (பெருவிரலை மூடிக்கொள்ளுங்கள்) என்று சொன்னீர்கள்' என்ருர்கள். அப்போதுதான் எனக்கு புஷ் (BOUCHE-வாய்)க்கு பதிலாக புஸ்(POUCE –பெருவிரல்) போட்ட விபரம் தெரிந்தது 'நான் வாயை அல்லவா மூடச் சொன்னேன்' என்று என் வாயைக் காட்டி (புஸ்–புஸ்) என்றதும் வகுப்பில் தாங்க முடியாத சிரிப்பொலி எழுந்தது.

*[தமிழ் மலர்ச்சி, பிப்ரவரி 1979]*

# முத்துக் குமிழ்கள்

—மதி—

தேவி!
நாமிருவரும்
ஒரு முகத்தின்
இரு விழிகள்தான்...
ஆயினுங் கூட
ஒருவரை யொருவர்
காணமுடியா
கட்டாயச் சாபம்
பெற்ற பிள்ளைகள்...
என்ற போதிலும்
நமது காட்சி
ஒன்று என்பதில்...
அற்ப மகிழ்ச்சி!
அநியாய வாழ்க்கை!!

தேவி!
சாவுக்குப் போராடிக் கொண்டிருக்கும்...
நமது
காதல் குழந்தைக்கு
உயிர் கொடுக்க
நாம்
எடுத்துக்கொண்ட
முயற்சிகளில்...
தோல்வியின் நிழல்
படிகிறது...
காரணம்
நமது டாக்டர்களே
எமன்களின்
அவதாரங்களாகி விட்டதால்...
என்ற போதிலும்...
கல்லறைக் குள்ளிருந்தே
நமது பிள்ளை
கனவுக் கற்பனைகளை
அனுப்பிக் கொண்டிருப்பான்...
கவலைப் படாதே!

*[தமிழ் மலர்ச்சி, ஏப்ரல் 1979.]*

